# சிலையாகி நிற்கும் செம்மல்கள்

புலவர் கோ. வில்வபதி

( [illegible] )

வர்தா பதிப்புக் கழகம்

திருவல்லிக்கேணி :: சென்னை

விலை ரூ. 1-00

# முன்னுரை

தமிழின் பெருமையைத் தரணி அறியச் செய்த இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் தமிழ் வளர்த்த சான்றோர்களுக்குச் சிலையமைத்துப் போற்றிய சீரிய செயல் தமிழரின் நன்றி மறவா நற்பண்புக்குச் சான்றாகும்.

சென்னைக் கடற்கரையில் சிலையாகி நிற்கும் செம்மல்களின் திருவுருவங்களைக் கண்டு களிப்பும் பெருமிதமும் கொள்வதுடன் அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளையும் தமிழ் வளர்த்த செயல்களையும் அறிந்து தமிழ் உணர்வு கொள்ளல் தமிழ் மக்களின் தலையாய கடமையாம்.

இன்றைய இளைஞர்களே எதிர்காலக் குடிமக்கள் ஆதலின் அவர்கள் உள்ளத்தில் அத்தகைய தமிழுணர்வு தழைக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் தமிழ் வளர்த்த அச்சான்றோர்களின் வாழ்வு நிகழ்ச்சிகளையும் வளமார்ந்த தொண்டுகளையும் சுவைபட எடுத்துக் கூறுகிறது இந்நூல்.

உயர்பள்ளி மாணவர்கள் ஆர்வமுடன் பயில்வதற்கு ஏற்ற இனிய எளியநடையில் எழுதப்பட்டுள்ள இந்நூலைப் பாடமாக வைத்து ஆதரிப்பதன் வாயிலாக எனக்கு மேலும் இத்துறையில் ஊக்கமும் ஆக்கமும் அளிக்குமாறு ஆசிரியப் பெருமக்களை வேண்டிக் கொள்கின்றேன்.

—ஆசிரியர்

# உள்ளுறை

# சிலையாகி நிற்கும் செம்மல்கள்

## தோற்றுவாய்

அமிழ்தினும் இனியது நம் தமிழ் மொழி. அஃது உலக மொழி எனப் போற்றத் தகும் பெருமை வாய்ந்தது; 'என்றுமுள தென்றமிழ்' என்று ஆன்றோர்களால் பாராட்டப்பட்ட பழமை யுடையது; இயற்கையில் தோன்றி வளர்ந்து மக்களின் உள்ளக் கருத்துக்களைத் தெள்ளிதின் விளக்கும் சொல் வளம் பெற்றது; நாகரிக மொழிகளுள் நன்மணியாய்த் திகழ்வது; மொழி நூலறிஞர்களால் 'உயர் தனிச் செம்மொழி' என்று போற்றப்படும் பெருமை சான்றது.

**உலகத் தமிழ் மாநாடு**

இத்தகைய சீர் சான்ற செந்தமிழின் இனிமை, எளிமை, அழகு, ஆற்றல், அருமை, பெருமைகளை யெல்லாம் உள்ளவாறுணர்ந்து உலகுக்கு உணர்த்தவும், தமிழ் மொழியை உலகம் முழுவதும் பரப்பவும் உளங் கொண்ட தமிழறிஞர்களும், தமிழுணர்ந்த பிறநாட்டுப் பேரறிஞர்களும் ஒருங்கு கூடி 'உலகத் தமிழ் மாநாடு' என்ற பெயரில் 1966 ஆம் ஆண்டில் மலேசியாவில் ஒரு பெரிய மாநாட்டை நடத்தி வெற்றி கண்டனர். அதன் தொடர்பாக இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு தமிழ் பிறந்து வளர்ந்து வளங் கொழிக்கும் தமிழகத்தில் - தலை நகராகிய சென்னையில் 1968 சனவரித் திங்கள் முதல் நாள் தொடங்கிப் பத்து நாட்கள் சீரும் சிறப்புமாக

நடைபெற்றது. ஏறக்குறைய நாற்பதுக்கும் மேற்பட்ட அயல் நாடுகளிலிருந்து வந்திருந்த அறிஞர் பெருமக்களும் தமிழ்ச் சான்றோர்களும் தமிழக அரசும் பங்கு கொண்ட அம்மாநாட்டு நிகழ்ச்சிகளும், அதையொட்டி நடைபெற்ற மாபெரும் ஊர்வலம், கலைக்காட்சி, கருத்தரங்கு, கவியரங்கு, இசை, நாடகங்கள் முதலிய நிகழ்ச்சிகளும் தமிழர்கள் என்றும் நினைந்து இன்புறக் கூடியனவாய் அமைந்தன.

### சிலை யமைத்த சீரிய செயல்

உலக வரலாற்றில் இது போன்றதொரு நிகழ்ச்சியைக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை என்று நல்லறிஞர்கள் அனைவரும் பாராட்டக் கூடிய வகையில் நடைபெற்ற அம்மாபெரும் விழாவின் நிகழ்ச்சிகளுள் ஒன்றாய்த் தமிழ் வளர்த்த சான்றோர்களுக்குச் சிலையமைத்துப் போற்றிய செயல் தமிழ் பண்பாட்டின் உயர்வுக்கு, தமிழர்களின் நன்றி மறவாப் பண்பிற்கு நல்லதோர் எடுத்துக் காட்டாய் அமைந்தது.

### தொன்று தொட்ட தமிழ்ப் பண்பாடு

வீரத்திலும் ஈரத்திலும் சிறந்தவர்க்கும், கற்பு நெறியில் உயர்ந்த காரிகையர்க்கும், செயற்கருஞ் செயல் புரிந்த செம்மல்கட்கும் சிலையெடுக்கும் வழக்கம் தொன்று தொட்டு வரும் தமிழ்ப் பண்பாடாகும். தமிழ்ப் பண்பாட்டினை வரையறுத்துக் கூறும் ஒல்காப் புகழ் படைத்த தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கண நூல் 'நடுகல்' என்ற பெயரில் சிலையமைக்கும் இச்செய்தியை விளக்கமாக எடுத்துக் கூறுகிறது. கற்பரசியாம் கண்ணகிக்குச் சேரன்

செங்குட்டுவன் சிலையமைத்து வழிபட்ட செய்தியைச் செஞ்சொற் காவியமாகிய சிலப்பதிகாரம் சுவைபட எடுத்துரைக்கின்றது. புறநானூறு என்னும் பழந் தமிழ்க் கருவூலத்தில் இதற்குச் சான்றாக அமைந்த நிகழ்ச்சிகள் பலவற்றைக் காணலாம்.

### சிலை யெடுப்பு விழா

தொன்று தொட்டு வரும் அச்சீரிய பண்பாட்டினை யொட்டி இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் உலகப் புகழ்பெற்ற சென்னைக் கடற்கரையில் செந் தமிழ் வளர்த்த சான்றோர் பதின்மருக்குச் சிலை யமைத்துப் பாராட்டிய நிகழ்ச்சி பெருமைக்குரிய தாம். சனவரித் திங்கள் இரண்டாம் நாள் சென்னைக் கடற்கரையில் மற்றொரு கடல்போல் முகத்தில் பெருமித உணர்ச்சியலை பொங்கத் திரண்டிருந்த மக்கள் திரளுக்கிடையில், தமிழக முதல்வர் பேரறிஞர் அண்ணா அவர்கள் முன்னிலையில், அயல்நாடு களிலிருந்து வந்திருந்த அறிஞர்களும் ஆன்றோரும் சான்றோரும் வாழ்த்த அச்சிலைகளைத் திறந்து வைத்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாக விளங்கியது.

### சிலையாகி நிற்கும் செம்மல்கள்

உலகப் பொது மறையாகிய திருக்குறளை அளித்த தெய்வப் புலவர் திருவள்ளுவர், அருந் தமிழ் மூதாட்டி அவ்வையார், காவியப் புகழ்பெற்ற கற்பரசி கண்ணகி, கவிச் சக்கரவர்த்தி கம்பர், அயல் நாட்டில் பிறந்தும் தமிழ் கற்றுத் தமிழராய் வாழ்ந்து தமிழ்த் தொண்டு புரிந்த வீரமா முனிவர், திருக் குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தமிழின்

பெருமையைத் தரணிக்குணர்த்திய போப்பையர், திராவிட மொழிகளின் தாய் தமிழே என்னும் உண்மையை நிலைநாட்டிய ஒப்பிலக்கணம் தந்த கால்டுவெல், கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனார், இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞராய் தமிழில் ஒரு புதிய எழுச்சியை, மறுமலர்ச்சியை உருவாக்கிய மகாகவி பாரதியார், 'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே முழங்கு' என்று சங்கநாதம் செய்த சிங்கத் தமிழ் பாவேந்தர் பாரதி தாசனார் ஆகிய பதின்மரும் சிங்காரச் சென்னைக் கடற்கரைச்சாலையில் சிலையுருவாய்ச் செம்மாந்து நிற்கின்றனர்.

தோற்றுவாய்

சிலையாகி நிற்கும் இச்செம்மல்களைக் காணுந்தோறும் தமிழ் மக்களாகிய நம் உள்ளத்தில் இன்பம் பொங்குகின்றது. சங்க காலம் முதல் இக்காலம் வரையிலும் வாழையடி வாழையாய் வாழ்ந்து தமிழ் வளர்த்த அச்சான்றோர்களின் வழி வந்தவர்கள் அல்லவா நாம் என நினைக்கும்போது நம் முகத்தில் அளவிட முடியாத பெருமிதம் சுடர்விட்டொளிர்கின்றது. இங்ஙனம் சிலைகளைக் கண்டு செம்மாப்பதோடு அமையாமல், அச்சான்றோர்கள் தமிழ் வாழ - வளரப் புரிந்த அருந்தொண்டுகளையும் அனைவரும் அறிந்து பயனுற வேண்டும். குறிப்பாக இன்றைய இளைஞர்கள் அவற்றை உணர்ந்து ஏற்றம் பெற வேண்டும் என்ற எண்ணத்தால் எழுந்தது இந்நூல். இனி இதனைச் சுவைத்து இன்புறுவோமாக.

# 1. தெய்வப் புலவர் திருவள்ளுவர்

உலகம் முழுவதும் ஒரு குடும்பமாக வாழவேண்டும் என்னும் உணர்வு இன்று மக்கள் மனத்தில் அரும்பி மலர்ந்து வருகிறது. உலகின் பல பாகங்களிலும் வாழும் நடுவுநிலை நல்லறிவாளர் பலர் அந் நல்ல குறிக்கோள் வெற்றிபெற உழைத்து வருகின்றனர்; மக்களிடையே காணப்படும் குறுகிய சாதி மத மொழி நிற வேறுபாடுகள் ஒழிந்து ஒருமைப்பாடு ஓங்கப் பாடுபட்டு வருகின்றனர். அவர்களுடைய உயரிய நோக்கம் நிறைவேறவும், உலகம் ஒரு குலமாக வாழவும் வழி காட்டும் நூல்களில் தலையாயது திருக்குறளாகும்.

**திருக்குறள் உலகப் பொது நூல்**

திருக்குறள் அமிழ்தினுமினிய தமிழ் மொழியில் இயற்றப்பட்டிருந்தாலும் அது தமிழருக்கு மட்டும், தமிழ் நாட்டுக்கு மட்டும் உரிமையானதாய் விளங்காமல் உலகம் முழுவதற்கும் பொதுவாய் அமைந்துள்ளது. திருக்குறளில் உணர்த்தப்படும் அறம், பொருள், இன்பம் என்பன ஒரு நாட்டார்க்கோ, ஒரு மொழியார்க்கோ உரியன அல்ல. அவை உலகம் முழுவதற்கும் பொதுவானவை. அதனாலேயே,

> 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
> வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'

என்று வள்ளுவரை உலகப் பேரறிஞராகக் கூறிப் பாராட்டினார் மகாகவி பாரதியார்.

## காலத்தை வென்ற நூல்

உலகப் பொது நூலாய் விளங்குவதோடு திருக்குறள் எக்காலத்துக்கும் ஏற்புடைய இனிய நூலாகவும் திகழ்கிறது. எத்தனையோ பல நூல்கள் அவை தோன்றிய காலத்தில் பெருமையுற்று விளங்கிக் காலப் போக்கில் பெருமை குன்றித் தேய்ந்தன. ஆனால் திருக்குறள் தோன்றிய நாளிலிருந்து இந்நாள் வரை மக்கள் விரும்பிப் போற்றும் நூலாய் – இனி வருங்காலத்தவரும் போற்றி வரவேற்கக்கூடிய நன்னூலாய்–அதன் மூலம் காலத்தை வென்ற கவின் மிகு இலக்கியமாய் விளங்கி வருகிறது.

## தமிழரின் உயிர்நாடி

இத்தகைய ஒப்புயர்வற்ற பெருநூல் தமிழ் மொழியில் தோன்றியமையால் தமிழ்மொழியும், தமிழ் மக்களும், தமிழ்நாடும் பெற்றுள்ள – பெற்று வருகின்ற உயர்வு மிகப் பெரிதாகும். தமிழ் மொழி உலகில் வழங்கும் நாகரிகம் பெற்ற நன்மொழிகள் சிலவற்றுள் சிறந்தது என்றும், தமிழ் மக்கள் மிகப் பழங்காலந்தொட்டு எல்லா வகைகளிலும் ஏற்றம் பெற்ற உயரிய இனத்தவர் என்றும், தமிழ்நாடு உயர்ந்த கொள்கைகளை – சீரிய நாகரிகத்தை உலகுக்கே வழங்க வல்ல ஊற்றிடம் என்றும் அயல் நாட்டவரும் அறிந்து கொள்ளச் செய்த பெருமை திருக்குறள் ஒன்றனையே சாரும் எனலாம். தமிழரின் தலை நிமிர்ந்த வாழ்விற்கு உயிர்நாடியாய் விளங்குவது அருமைத் திருக்குறளேயாகும். இத்தகைய பெருமையைத் தமிழகத்திற்குத் தேடித் தந்தவர் தெய்வப் புலவர் திருவள்ளுவர் ஆவர்.

### வள்ளுவர் பிறந்த ஊர்

திருவள்ளுவரைப் பற்றிப் பற்பல கருத்துக்கள் கூறப்படுகின்றன. அவர் மயிலாப்பூரில் பிறந்தவர் என்று பழங்கதை கூறுகின்றது. திருவள்ளுவ மாலைச் செய்யுள் ஒன்றில் வள்ளுவரைப் 'புனற் கூடற்கு அச்சு' என்று குறிப்பிட்டிருத்தலால் அவர் மதுரையில் பிறந்தவரே யாவர் எனச் சிலர் வாதிடுகின்றனர். மயிலையில் பிறந்து மதுரையில் வாழ்ந்தவர் என இருவர்க்கும் பொருந்த உரைத்து இந்த வாதத்தைத் தவிர்க்க முயன்றனர் சிலர்.

### பெயர்க் காரணம்

பிறந்த ஊரைப்பற்றி மட்டுமல்லாமல் பேரைப் பற்றியும் கருத்து வேறுபாடுகள் உள்ளன. மயிலையில் ஆதரவற்ற குழந்தையாய்க் கிடந்த அவரை வள்ளுவன் ஒருவன் எடுத்து வளர்த்தமையால் வள்ளுவர் என்ற அவர்க்குப் பெயர் வழங்கியது என்பது பழங்கதை. வள்ளுவர் என்னும் பெயர் தமிழ் வளப்பமுடையவராய் விளங்கியமையால் ஏற்பட்டது என்று சிலர் கருதுகின்றனர். வள்ளுவர் என்பார் பண்டைக் காலத்தில் அரசனுக்கு அந்தரங்க ஆலோசனை கூறும் உட்படு கருமத்தலைவராவர். வள்ளுவர் அத்தகைய பொறுப்பான உயர் பதவி வகித்த காரணத்தால் அவர் இயற்பெயர் வழக்கொழிய வள்ளுவர் என்னும் புகழ்ப் பெயராலேயே வழங்கப்பட்டார் என்று கூறுகின்றனர் ஆராய்ச்சியாளர். பொருட்பாலில் அரசியல்பற்றி அவர் கூறியுள்ள அரிய நுட்பங்களை நோக்கும்போது அது பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

**காலத்தைப் பற்றிய கருத்துக்கள்**

வள்ளுவர் வாழ்ந்த காலத்தைப் பற்றியும் இன்னும் உறுதியாகக் கூற இயலவில்லை. வள்ளுவர் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது ஆராய்ச்சியாளர் சிலர் கருத்து. புறநானூற்றில் உள்ள சில பாடல்களில் வள்ளுவருடைய கருத்துக்களைப் புலவர்கள் எடுத்தாண்டுள்ளமையால் வள்ளுவர் அவர்கட்கெல்லாம் முன்னர் வாழ்ந்தவராதல் வேண்டும் என்று கொண்டு கி.மு. முதல் நூற்றாண்டே அவர் காலம் எனச் சிலர் அறுதியிட்டுரைக்கின்றனர். கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும், அதற்கும் முற்பட்டவர் என்றும் கூறுவாருமுளர்.

**வாழ்க்கை வரலாறு**

இங்ஙனம் நீண்ட நெடுங்காலத்துக்கு முன் வாழ்ந்தமையால் வள்ளுவர் வாழ்க்கையைப்பற்றி நாம் தெளிவாக அறிந்துகொள்ள இயலவில்லை. செவி வழிச் செய்தியாக அவருடைய வாழ்க்கையைப்பற்றிப் பற்பல வரலாறுகள் கூறப்படுகின்றன. அவை யாவும் புனைந்துரைகளே என்று அறிஞர்கள் கருதுகின்றனர். அவை புனைந்துரைகளாயினும் தமிழ் மக்கள் வள்ளுவரிடத்துக் கொண்டிருந்த பேரன்பினையும் பெருமதிப்பினையும் விளக்குவனவாக இருத்தலின் அவைபற்றி ஓரளவு அறிந்துகொள்வோம்.

**இளமையும் கல்வியும்**

வள்ளுவர் மயிலாப்பூரில் ஆதி என்ற தாய்க்கும் பகவன் என்ற தந்தைக்கும் மகனாய்ப் பிறந்தார். பெற்றோர்கள் இருவரும் தங்களுக்குள் செய்து கொண்ட முடிவுப்படி அக் குழந்தையைப் பிறந்த

இடத்திலேயே விட்டுப் பிரிந்து சென்றனர். அங்ஙனம் அநாதைக் குழந்தையாகக் கிடந்த அவரை அவ்வழியே சென்ற வள்ளுவன் ஒருவன் கண்டெடுத்து அன்புடன் வளர்த்து வந்தான். வள்ளுவனால் வளர்க்கப்பட்டமையின் அவர் வள்ளுவர் என்றே பெயர்பெற்று நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தார்; உரிய பருவத்தில் தமிழ் இலக்கண இலக்கியங்களை முறையாகக் கற்றுக் கவிபாடும் திறம்பெற்றார். அவர் உயர்ந்த நூலறிவோடு பரந்த உலகியலறிவும் வாய்க்கப் பெற்று விளங்கினர்.

## இல்லற வாழ்வு

தக்க பருவம் அடைந்தவுடன் வள்ளுவர் மார்க்கசகாயர் என்னும் வேளாளரின் அருமைத் திருமகள் வாசுகியை மணந்து இல்லறத்தை நல்லறமாக நடத்தி வந்தார். அவர் பழங்காலப் புலவர்களைப் போலத் தம் புலமை நலத்தால் பிறரைப் புகழ்ந்து பாடிப் பரிசுபெற்று வாழ விரும்பாமல், செய்யும் தொழிலனைத்தினும் நிகரற்றதான நெய்யுந்தொழிலை மேற்கொண்டு வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வந்தார்.

## தெய்வத் திருக்குறள் இயற்றல்

இங்ஙனம் கருத்தொத்த துணைவியாரோடு பிறர் கையை எதிர்பாராமல் வாழ்ந்த வள்ளுவர் வாழ்வில் கவலைக்கு இடம் ஏது? கவலையற்ற இடத்தில் தானே கலை பிறக்கும்? வள்ளுவர் மனத்தடத்திலிருந்து உலகை உய்விக்கும் ஒப்பற்ற இலக்கியம் ஒன்று உருவாகத் தொடங்கியது. தம் கல்வி கேள்விகளால் உணர்ந்தவற்றையும், பரந்த அனுபவ வாயி

லாக அறிந்தவற்றையும் அடிப்படையாகக் கொண்டு ஆய்ந்து தேர்ந்த தெளிந்த சொற்களால்-இரண்டிரண்டு அடிகளாக அமைந்த குறள் வெண்பாக்களால்—திருக்குறள் என்னும் தெய்வச் செழுமறையை இயற்றினார் வள்ளுவர்.

**மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றல்**

அவ்விழுமிய நூலை அக்காலத்தில் புகழ்பெற்று விளங்கிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்ற வேண்டும் என்பது அவர் ஆவல். அது கருதி அவர் மதுரைக்குச் சென்று சங்கப் புலவர்களைக் கண்டு தம் விருப்பத்தை வெளியிட்டார். அவர்கள் வள்ளுவரைத் தம்மோடு ஒப்ப மதிக்கத் தயங்கிச் சங்கப் பலகையில் இடம் அளிக்க மறுத்தனர். வள்ளுவர் தம்மை மதியாவிட்டாலும் தம் நூலுக்காவது இடமளிக்குமாறு வேண்டினார். அதற்கு அவர்கள் இசையவே திருக்குறட் சுவடியைச் சங்கப் பலகையின் மீது வைத்தார். உடனே பொற்றாமரைப் பொய்கையில் மிதந்துகொண்டிருந்த அப்பலகை அச்சுவடியின் அளவாய்க் குறுகிவிட்டது. வள்ளுவரைப் புறக்கணித்த புலவர்கள் அனைவரும் நிலைகுலைந்து பொற்றாமரைப் பொய்கையுள் விழுந்து வருந்தினர். பின்னர் அவர்கள் வள்ளுவரின் தெய்வத் தன்மையை உணர்ந்து அவரைத் 'தெய்வப் புலவர்' என்று போற்றினர்; திருக்குறளின் பெருமையை வியந்து பாராட்டி ஆளுக்கொரு செய்யுள் இயற்றினர். அப்பாடல்கள் யாவும் 'திருவள்ளுவமாலை' என்ற பெயரில் ஒரு நூலாய் — திருக்குறளின் புகழ்மாலையாய்ப் பொலிகின்றன.

### வாசுகியின் பிரிவு

திருக்குறளைத் தவிர வள்ளுவர் பாடிய செய்யுளாகத் தனிப்பாடல் திரட்டில் ஒரு செய்யுள் காணப்படுகிறது. அஃது அவருடைய வாழ்க்கைத் துணைவியார் வாசுகி அம்மையார் பிரிவின்போது அவர் நெஞ்சுருகிப் பாடியதாகும். கற்புச் செல்வியாகிய வாசுகி மறைந்தபோது ஆருத்துயரம் கொண்ட வள்ளுவர்,

"அடிசிற் கினியாளே அன்புடை யாளே
படிசொல் தவறாத பாவாய்—அடிவருடிப்
பின்தூங்கி முன்னெழும் பேதையே போதியோ
என்தூங்கும் என்கண் இரா,"

என்று அக் கற்புக்கரசியின் அன்புடைமையை நினைந்து கண்ணீர் சொரிந்தார் என்று கூறுவர். இப்பாடலில் 'படிசொல் தவறாத பாவாய்' என வரும் தொடரைக்கொண்டு வாசுகியாரின் கற்புமாட்சியை விரித்துக் கூறும் கதைகள் பலவும் வழங்குகின்றன.

### திருவள்ளுவரின் புகழுருவம் திருக்குறளே

வள்ளுவரைப் பற்றி வழங்கும் இவ்வரலாறுகள் உண்மையா எனத் தெளிவதற்கு ஏற்ற சான்றுகள் இல்லை. எனினும் அவர் இல்லறநெறியில் ஒழுகியவர் என்பதும் அறவோர் என்பதும் அவர் நூலால் விளங்குகின்றன. திருவள்ளுவரின் புறவாழ்வை விளக்கும் சான்றுகள் இல்லாவிட்டாலும் அவருடைய அக வாழ்வை அவர் தம் புகழுருவாய் விளங்கும் திருக்குறளின் மூலம் நன்கு உணரலாம்.

### திருக்குறள் — பெயர்க் காரணம்

குறள் என்பது தமிழ்மொழியில் அமைந்த ஒரு பாட்டு வகையாகும். அஃது இரண்டடிகளாலானது.

அத்தகைய குறள் வெண்பாக்களினாலேயே இந்நூல் முழுதும் இயற்றப்பட்டுள்ளமையின் இது குறள் எனவே பெயர் பெற்றது. திரு என்பது இந்நூலின் மேன்மையை உணர்த்தும் அடைமொழியாகும். உத்தரவேதம், பொய்யாமொழி, பொதுமறை, வாயுறைவாழ்த்து, முப்பால் என வேறு பல பெயர்களும் இந்நூலுக்கு வழங்குகின்றன.

## முப்பால்

இந்நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என மூன்று பிரிவுகளையுடையதாய் நூற்று முப்பத்துமூன்று அதிகாரங்களையும், அதிகாரத்துக்குப் பத்துப் பாடல்களாக ஆயிரத்து முந்நூற்று முப்பது அரிய குறட்பாக்களையும் கொண்டு அமைந்துள்ளது. அதனாலேயே இந்நூல் முப்பால் என வழங்கப்படுகிறது. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கனுள்ளும் வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமையது ஆதலின் அதனைத் தவிர்த்து ஏனைய மூன்றையும் பற்றி வள்ளுவர் தம் நூலில் விளக்கிக் கூறியுள்ளார்; வீட்டைப் பற்றி வெளிப்படையாகக் கூறாவிட்டாலும் இலைமறை காய்போலக் குறிப்பாக முப்பாலிலேயே அடக்கி நாற்பாலையும் மொழிந்துள்ளார்.

## வாழ்க்கைத் துணை நூல்

திருக்குறள் கூறாத கருத்தில்லை. "எல்லாப்பொருளும் இதன்பால் உள; இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை," என்று இதன் பெருமையைப் போற்றிக் கூறியுள்ளார் ஒரு புலவர். அறத்தை விரும்புவார்க்குத் திருக்குறள் ஓர் அற நூல். பொருளை விழைவார்க்கு அஃது ஒப்புயர்வற்ற

பொருள் நூல். அரசியலை நாடுவோர்க்கு நல்வழி காட்டும் சிறந்த அரசியல் நூல். இல்லறத்தார்க்கு இல்லறத்தை இனிது நடத்தத் துணைபுரியும் இல்லற நூல்; துறவறத்தார்க்கு மெய்ஞ்ஞானத்தை விளக்கிப் பற்றற்று வீடுபெற வழிகாட்டும் ஞான நூல். மக்கள் வறுமையும் பசியும் நீங்கி, நோயும் நொடியுமின்றி, கல்வி கேள்விகளிற் சிறந்து, ஒழுக்கத்தில் உயர்ந்து, அன்பு, அடக்கம், இன்சொல், ஈகை, வாய்மை முதலிய பண்புகளை உடையவராய் ஒருவர்க்கொருவர் உதவியாக வாழ வழி வகுத்துரைக்கும் ஒப்புயர்வற்ற சமுதாய நூல். சுருங்கக் கூறினுல் இன்றைய மக்கள் வாழ்வில் ஏற்படும் எத்தகைய சிக்கல்களுக்கும் அறநெறியில் தீர்வுரைத்து நல்வாழ்வுக்கு வழிகாட்டும் வாழ்க்கைத் துணை நூல் திருக்குறள் என்று கூறலாம்.

### எடுத்துக்காட்டான இலக்கியம்

இத்தகைய சிறப்புப் பற்றியே திருக்குறள் எப்பொருள்பற்றிப் பேசுவோர்க்கும் நூல் எழுதுவோர்க்கும் எடுத்துக்காட்டாய்-மேல் வரிச்சட்டமாய் அமைந்துள்ளது. ஒரு கருத்துப்பற்றிக் குறள்கூறும் கருத்து இஃது எனின் அதற்குமேல் அது குறித்து வாதம் இல்லை. வள்ளுவர் கருத்துக்குப் பண்டு முதல் இன்றுவரை இந்தப் பெருமை இருந்து வருகிறது. அதனுல் வள்ளுவர்க்குப் பின் நூல் எழுதிய பெரும் புலவர்களும் கவியரசர்களும் தம் கருத்துக்களுக்கு அரணுகக் குறளை எடுத்தாண்டுள்ளனர். திருக்குறளை எடுத்தாளாத தமிழ்ப் புலவர்களோ, கவிஞர்களோ, கட்டுரையாசிரியர்களோ, பேச்சாளர்களோ இல்லை எனலாம்.

### திருவள்ளுவ மாலை

மற்றும் திருக்குறளுக்குள்ள வேறொரு பெருமையும் குறிப்பிடத்தக்கதாகும். திருக்குறளின் மாண்பினையும், அதனை இயற்றிய வள்ளுவரின் பெருமையையும் விளக்குவதையே பொருளாகக் கொண்டு திருவள்ளுவமாலை என்னும் ஒரு நூலே தோன்றியுள்ளது. இத்தகைய பெருமை வேறு எந் நூலுக்கும் வாய்த்தது இல்லை. அந் நூலில் சங்கப் புலவர்கள் பாடிய பாடல்கள் ஒவ்வொன்றும் திருக்குறளின் சிறப்பியல்புகளை ஒவ்வொரு வகையாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.

### புலவர் புகழ் மாலை

இறையனார் என்னும் பெரும் புலவர் "என்றும் வாடாமல் நின்று தேன் சொரியும் தெய்வ மலர்," என்று திருக்குறளைப் போற்றிப் புகழ்கின்றார். "திருமால் குறளாய் வாமனனாய் வந்து தன் இரண்டடிகளால் இவ்வுலகம் முழுவதையும் அளந்தார். ஆனால் வள்ளுவப் பெருந்தகையாரோ தம் குறட்பாவின் ஈரடியால் உலகத்தார் உள்ளத்து உள்ளுவனவெல்லாம் அளந்துவிட்டார்," என்று வியந்து பாராட்டுகிறார் பரணர். "செய்யாமொழியாகிய வேதத்துக்கும் வள்ளுவர் இயற்றிய பொய்யா மொழிக்கும் பொருளொன்றே," என்று போற்றுகிறார் வெள்ளிவீதியார். நத்தத்தனார் என்னும் நற்றமிழ்ப் புலவர், "ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளையும் பயின்றவர்கள் மீண்டும் போய் ஒருத்தர் வாய் கேட்க நூல் உளவோ?" என்று வினவுகிறார்.

"ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்
உள்ளுந்தொ றுள்ளுந்தொ றுள்ளம்உருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு,"

என்று மாங்குடி மருதனார் வள்ளுவர் வாய்மொழியில் தம் உள்ளத்தைப் பறிகொடுத்து உருகி நிற்கின்றார்.

## சிறுமையும் பெருமையும்

கபிலர் என்னும் புலவர் பெருமான் மிகவும் சிறிய திருக்குறட் பாடல்களில் மிகப் பெரிய கருத்துக்கள் அடங்கியுள்ள அதிசயத்தை எண்ணி வியக்கிறார். "புல்லின் நுனியில் உள்ள தினையளவான பனித்துளி, பனையளவான பேருருவின் சாயலைத் தன்னுட் கொண்டு காட்டுவதுபோலச் சிறிய குறள் வெண்பா ஒவ்வொன்றும் மிகப் பெரிய பொருளைத் தன்னுள் கொண்டு காட்டுகிறது," என்று அவர் குறளின் அருமையைப் பாராட்டுகிறார். குறளின் இந் நீர்மையை வேறொரு உவமை கூறி விளக்குகிறார் இடைக்காடர்.

"கடுகைத் துளைத்தெழு கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்,"

என்பது அவர் வாய்மொழி. சிறிய கடுகைத் துளை செய்து, அத்துளையுள் எழுகடல் நீரைப் பெய்து வைத்ததுபோல அமைந்துள்ளது குறள் என்பது அதன் கருத்து. ஔவையார் என்னும் அருந்தமிழ் மூதாட்டியாரோ, கடுகே பெரிது; அதனினும் நுண்ணியது அணு; அந்த அணுவைத் துளைத்து எழுகடலைப் புகுத்தியதுபோல அமைந்தது குறள் என்று கூறுவதே குறளின் சிறுமைக்கும் அது கூறும்பொருளின் பெருமைக்கும் பொருத்தமான உவமையாம் என எண்ணி,

"அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்,"

என்று அப்பாடலையே மாற்றிப் பாடிக் குறளின் மாண்பினை விளக்கினர்.

சமயப் பொது நூல்

திருக்குறள் ஒரு சமயப் பொது நூல். வள்ளுவர் பாடியுள்ள கடவுள் வாழ்த்தே எல்லாச் சமயத்தவரும் கொள்ளத்தக்க வகையில் பொதுமையாக அமைந்துள்ளது. இறைவனை அரன் என்றோ, அரி என்றோ, புத்தன் என்றோ, அருகன் என்றோ குறிப்பிட்டுக் கூறாமல் வாலறிவன், மலர் மிசை ஏகினன், வேண்டுதல் வேண்டாமை இலான், தனக்குவமையில்லாதான் என்பன போல எல்லோரும் ஏற்கும் பொதுமையான பெயர்களாலேயே வள்ளுவர் குறிப்பிட்டுக் கூறியுள்ளார். அதனால் சைவர்கள் வள்ளுவரைத் தம்மவராகக் கூறிச் செம்மாக்கின்றனர்; வைணவர் திருவள்ளுவர் எம்மைச் சார்ந்தவரே என்று கூறிப் பூரிக்கின்றனர். திருவள்ளுவர் கொல்லாமை, புலாலுண்ணாமையாகிய அறங்களை வற்புறுத்திக் கூறுகின்றமையால் பௌத்தரும் சமணரும் வள்ளுவர் தங்களைச் சார்ந்தவரே என வாதிடுகின்றனர்.

"இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு?"
"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்,"

என்ற அருமைக் குறள்களைப் படித்த கிறித்தவ சமயத்தினர், "இவை எங்கள் ஏசு பெருமான் மலைச் சொற்பொழிவில் கூறிய கருத்துக்கள் அல்லவோ?" என்று மகிழ்ந்து வள்ளுவரிடம் உரிமை கொண்டாடு

கின்றனர். இங்ஙனம் எல்லாச் சமயத்தவரும் விரும்பி ஏற்கும் சமயப் பொது நூலாய்த் திகழ்கிறது திருக்குறள்.

## உலக மொழிகளில் திருக்குறள்

வள்ளுவர் இயற்றிய தெய்வத் திருக்குறள் இங்ஙனம் எத்திறத்தாரும் விரும்பி ஏற்கும் மெய்ந் நூலாக விளங்கும் சிறப்பு நோக்கியே வீரமாமுனிவர் அதனை முதலில் இலத்தீன் மொழியில் மொழி பெயர்த்தார். பின்னர் துருவர் என்பாரும், போப்பையரும் அதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தனர். அவற்றுள் போப்பையர் நூலே முழுமையானது. உலகப் பெருமொழியாக விளங்கும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டவுடன் திருக்குறளின் மாண்பினை உலகம் முழுவதும் உணர முடிந்தது. இன்று உலகப் பெருமொழிகள் பலவற்றிலும் திருக்குறள் மொழி பெயர்க்கப்பட்டு அனைவராலும் விரும்பிப் படிக்கப்படுகிறது; வியந்து போற்றப்படுகிறது.

## குறள் நெறி பரவுக

இங்ஙனம் உலகெலாம் போற்றும் ஒப்புயர்வற்ற நூல் தோன்றிய மொழி தமிழ்; அம்மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் நாம் என்று பெருமிதம் அடைவதோடு நின்று விடாமல் திருக்குறளைப் பயில வேண்டும்; குறள் கூறும் நெறியில் ஒழுக வேண்டும்; குறள் நெறி தமிழகத்தில் மட்டும் அல்லாமல் தரணி எங்கும் பரவ உழைக்க வேண்டும். அத்துறையில் தமிழகத்தில் இப்போது ஒரு புதிய எழுச்சி தோன்றி யிருப்பது மகிழ்ச்சியை விளைக்கிறது.

**வள்ளுவர் சிலை**

தமிழக அரசின் சார்பில் தலைநகராகிய சென்னையில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு, தமிழ் மொழியின் மாண்பினை உலகறியச் செய்ததோடு அம்மாண்புக்கு அடிப்படையாய் அமைந்த திருக்குறளின் பெருமையைப் பாராறியச் செய்யும் பெரு விழாவாகவும் அமைந்தது. அவ்விழாவில் தெய்வப் புலவர் திருவள்ளுவர்க்குச் சிலையமைத்து வழிபாடு செய்த நிகழ்ச்சி வரலாற்றுச் சிறப்புடையதாகும். உலகத் தமிழ் மாநாட்டின் நினைவாகத் தமிழகப் பல்கலைக் கழகங்களில் திருக்குறள் ஆராய்ச்சிப் பிரிவுகள் தோற்றுவிக்கப்பட்டமை வள்ளுவப் பெருமானுக்கு நாம் செலுத்தும் உண்மையான அன்புக் காணிக்கையாகும். அத்தகைய நன்முயற்சியில் ஈடுபட்ட தமிழக அரசும், அரசின் கருத்தைச் செயலாக்க உழைத்த அன்பர்களும் தமிழ் மக்களின் நன்றிக்கு என்றும் உரியவர்களாவர்.

**நம் கடமை**

திருக்குறள் வற்றாத அறிவு நீரூற்று. அந்நீரூற்றினின்று இதுவரை பெற்ற பயனைவிட இனிப் பெற வேண்டிய பயன் மிகுதி. பல்கலைக் கழக ஆராய்ச்சிப் பிரிவுகள் இத்துறையில் கவனம் செலுத்தி உழைப்பதுடன் திருக்குறளறிவு தமிழகமெங்கும் பரவப் பாடு படவேண்டும்; குறளறியாத தமிழர் ஒருவரும் இல்லை என்ற நிலை உருவாக வேண்டும். அனைவரும் குறளைக் கற்றுக் கற்ற வழியில் நிற்கத் தலைப்பட்டு விட்டால் நம் நாடு பொன்னுடாகும்; புது வாழ்வு மலரும்; எங்கும் இன்பம் நிலவும். அத்தகைய பெருநிலையை உருவாக்குவதே தெய்வப் புலவருக்கு நாம் செய்யும் கைம்மாறாகும்.

# 2. அருந்தமிழ் மூதாட்டி அவ்வையார்

'கல்வி சிறந்த தமிழ் நாடு' என்று கவியரசர் பாரதியாரால் பாராட்டப்பட்ட பெருமையுடையது தமிழ் நாடு. பண்டு முதல் இன்றளவும் தமிழ் நாடு அப்பெருமையை இழந்துவிடாமல் போற்றி வருகிறது. பண்டைக்காலத்தில் தமிழகம் கல்வித்துறையில் உலகிற்கே ஒரு கலங்கரை விளக்கமாய்த் திகழ்ந்தது. ஆண்களேயன்றிப் பெண்களும் கல்வியிற் சிறந்து கவிபாடும் திறம் பெற்று விளங்கினர். காவல் தொழில் புரிந்த காவற் பெண்டிரும், குறக்குடியிற் பிறந்த மகளிரும், பாணர்குலப் பாவையரும் கூடக் கல்வியில் வல்லவராய்க் கவிபாடியுள்ளனர் என்றால் பண்டைக் காலத்தில் பெண் கல்வி எவ்வளவு சிறந்திருந்தது என்பது விளங்குமன்றோ?

**அவ்வையாரின் பெருமை**

பெண் கல்வி என்றவுடன் நம் மனத்தில் அவ்வையார் என்னும் அருந்தமிழ் மூதாட்டியாரைப் பற்றிய எண்ணம் இயல்பாகவே எழும். எளிய குடியிற் பிறந்து தம் கல்விச் சிறப்பால்—கவிப் பெருமையால் தமிழகத்தை ஆண்ட முடியுடை மூவேந்தரும், குறுநில மன்னர்களும் பெருஞ்செல்வர்களும் தம் அடி பணிய வாழ்ந்த புலமைச் செல்வியாராகத் திகழ்ந்தவர் அவ்வையார். இவர் பாடிய பாடல்கள் யாவும் சொற்சுவையும் பொருட்சுவையும் செறிந்தன.

பா நலம் பழுத்த இவருடைய பாடல்கள் பல, சங்க இலக்கியங்களாகிய புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை போன்ற நூல்களில் காணப்படுகின்றன. அப்பாடல்களின் மூலம் அவ்வையாரின் அரிய புலமை நலத்தையும், ஆன்ற குணங்களையும் உணர்ந்து இன்புறலாம்.

## அவ்வையார் பலர்

அவ்வையார் இயற்றியனவாக நம் அருந்தமிழில் பல நூல்களும் தனிப்பாடல்களும் உள்ளன. அவற்றின் நடை, சொல்லாட்சி முதலியவைகளைக் கவனிக்கும்போது அவை யாவும் ஒருவராலேயே இயற்றப்பட்டனவாக எண்ண இயலவில்லை. ஆகவே அவ்வையார் என்ற பெயருடன் புலவர்கள் பலர் வாழ்ந்திருத்தல் வேண்டும் என அறிஞர்கள் கருதுகின்றனர். சங்க காலத்தில் வாழ்ந்து நல்லிசைப் புலமையிற் சிறந்து பாரனைத்தும் புகழுமாறு விளங்கிய அவ்வையாரின் அறிவு நலத்தில் ஈடுபட்டுப் பின்னர்த் தோன்றிய பெண்பாற் புலவர்கள் சிலரும் அப்பெயரைத் தம் இயற்பெயராகக் கொண்டு வாழ்ந்திருத்தல் வேண்டும் என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அவர்களுள் அவ்வையார் என்ற பெயருடன் சங்ககாலத்தில் வாழ்ந்த அறிவரசியின் வரலாற்றை மட்டும் இங்குக் காண்போம்.

## பிறப்பும் வளர்ப்பும்

அவ்வையார் பிறந்த ஊர், பெற்றோர், மரபு முதலியவை பற்றி ஏதும் அறிந்துகொள்ள இயலவில்லை. புறநானூற்றில் உள்ள அவருடைய பாடல்கள் சில

வற்றில் காணப்படும் குறிப்புக்களைக்கொண்டு அவர் பாணர் குடியைச் சேர்ந்தவராக இருத்தல் வேண்டும் எனச் சிலர் கருதுகின்றனர். அவருடைய பிறப்பைப் பற்றிப் பழங்கதை ஒன்றும் கூறப்படுகிறது. அவ்வையார் திருவள்ளுவரின் தமக்கையார் என்றும், அவரைப் பயந்த தாயும் தந்தையுமாகிய ஆதிபகவன் என்பவர்களே அவ்வையாரின் பெற்ருேர் என்றும் அக்கதை கூறுகிறது. பெற்ருேர்கள் இருவரும் தம் கொள்கைப்படி அக் குழந்தையைப் பிறந்த இடத்திலேயே விட்டுச் சென்றனர். பெற்ருேரால் கைவிடப்பட்ட அந்தக் குழந்தையைப் பாணன் ஒருவன் கண்டெடுத்து வளர்த்தான் என்பது அவ் வரலாற்றில் காணப்படும் செய்தியாகும்.

பெயர்க் காரணம்

பாணர் என்பார் யாழ்வாசிப்பதையே தொழிலாகக் கொண்டுவந்த பழங்குடியினராவர். அவர்கள் தம் யாழ் இசையால் அரசர்களையும் வள்ளல்களையும் மகிழ்வித்து அவர்கள் உள்ளம் உவந்து ஈந்த பொருளைக் கொண்டு வாழ்ந்து வந்தனர். அம் மரபைச் சார்ந்த அவ்வையாரும் இளம் பருவத்தில் ஆடல் பாடல் முதலிய அருங்கலைகள் எல்லாம் பயின்றதோடு, தமிழை முறையாகக் கற்றுப் பெரும் புலமை பெற்றுக் கவிபாடும் திறம் கைவரப்பெற்ற கவியரசியாகத் திகழ்ந்தார். இவர் மங்கைப் பருவம் அடைந்தவுடன் பெற்ருேர்கள் இவருக்கு மணம் செய்விக்க முயன்றனர். மணவாழ்க்கையில் விருப்பமற்ற இப் புலமைச் செல்வியார் தெய்வத் திருவருளால் முதுமை எய்தப்பெற்றுத் தமிழ்த்தொண்டு புரிவதையே தம் பிறவிப் பயனாகக்கொண்டு வாழ்ந்தார். இளமையி

லேயே முதுமை எய்தப்பெற்ற இவரைத் தாய் எனப் பொருள்படும் 'அவ்வை' என்ற பெயராலேயே அனைவரும் அழைக்கலாயினர். நாளடைவில் அப்பெயரே நாடறிந்த பெயராய் விளங்க, அவருடைய இயற் பெயர் யாது என அறிய இயலாததாய்விட்டது.

**புலமை நலம்**

அவ்வையார் தம் பெரும் புலமையால் தமிழகம் முழுவதும் புகழ் பரவ வாழ்ந்தார்; தமிழ்நாடு முழுவதும் சென்று பேரரசர்களையும் சிற்றரசர்களையும் வள்ளல்களையும் புகழ்ந்து பாடினர். அவருடைய கவிச் சுவையைப் பருகிய அனைவரும் அவரை வரவேற்றுப் போற்றுவதைத் தம் வாழ்க்கையின் பெரும் பயனாகக் கருதினர்; அவரோடு அளவளாவி இன்புற்று மகிழ்வதினும் சிறந்த இன்பம் வேறு இல்லை எனக் கொண்டனர். அவரால் பாடப்பட்டவர்கள் அதியமான் நெடுமானஞ்சி, அவன் மகன் பொகுட்டெழினி, தொண்டைமான், நாஞ்சில் வள்ளுவன், சேரமான் மாவெண்கோ, பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்பவராவர். புறநானூற்றில் காணப்படும் அவருடைய பாடல்களைக் கொண்டு அவருடைய வாழ்வு நிகழ்ச்சிகள் சிலவற்றை நாமறிதல் கூடும்.

**அதியமான் அஞ்சி**

அவ்வையாரால் புகழ்ந்து பாடப்பட்டவர்களுள் அதியமானே முதன்மையானவன். அதியமான் நெடுமான் அஞ்சி என்பது அவன் முழுப் பெயர். அதியமான் அருங்குணங்கள் பல வாய்ந்தவன்; வீரமும் ஈரமும் உடையவன்; தமிழ்மொழியினிடத்தும்

தமிழ்ப் புலவர்களிடத்தும் எல்லையிலா அன்பு பூண்டவன் தன்னைப் பாடிவரும் புலவர்கட்கும் பாணர் முதலியவர்கட்கும் பொன்னும் மணியும் ஈந்து கடையெழுவள்ளல்களுள் ஒருவனாக விளங்கியவன். அவன் தற்போது தருமபுரி என வழங்கப்படும் தகடூரைத் தலைநகராகக் கொண்டு கொங்கு நாட்டின் ஒரு பகுதியை ஆண்டுவந்தான்.

### அவ்வையாரும் அதியமானும்

நல்லிசைப் புலமை மெல்லியலராகிய அவ்வையார் அதியமானுடைய அருங்குணங்களை அறிந்து அவனைக் காண விரும்பித் தகடூருக்குச் சென்றார். அதியமான் அவரை எதிர்கொண்டு வரவேற்று முகமன் கூறி உபசரித்தான்; அறுசுவை விருந்து நல்கி மகிழ்வித்தான்; அன்போடு அளவளாவி இன்புற்றான். அவனுடைய பேரன்பையும் பெருங்குணங்களையும் கண்ட அவ்வையார் அவனைப் பாராட்டிப் பல பாடல்கள் பாடி மகிழ்வித்தார். அதியமான் அவரைத் தன்னோடு சில நாட்கள் தங்கியிருக்குமாறு வேண்டி அன்புடன் புரந்து வந்தான்.

### வள்ளலை வாழ்த்தல்

அப்போது அவ்வையார் நாள்தோறும் அதியமானுக்கு அரிய தமிழ் விருந்தளித்தும் அறிவுரைகள் பல கூறியும் மகிழ்வித்து வந்தார். அவனுடைய வரையாத வள்ளன்மையை வாயாரப் புகழ்ந்தார்; ஒரு நாள் மட்டுமல்லாமல் இருநாள் மட்டுமல்லாமல் பல நாட்கள் பலரோடு வந்தாலும் முதல் நாள் போல அன்புடன் வரவேற்றுப் போற்றும் அவனுடைய தண்ணளியை வியந்து பாராட்டினார்; பகைவர்க்கு அரியனாயும் நண்பர்கட்கு எளியனாயும் விளங்கும்

அவன் பண்புடைமையைப் போற்றினர். அவருடைய அறிவுரைகளையும் புகழ்மொழிகளையும் கேட்டு உள்ளம் குளிர்ந்த அதியமான் அவர்பால் எல்லையிலாப் பேரன்பு பூண்டு ஒழுகி வந்தான்.

**அதியனின் அரிய கொடை**

ஒருநாள் வேட்டையாடச் சென்ற அதியமான் மலைச்சரிவில் வளர்ந்திருந்த ஒரு கருநெல்லி மரத்தில் பழுத்திருந்த நெல்லிக் கனியைக் கண்டான்; அதனை உண்டவர் நீண்ட நாள் சாவாது வாழ்வர் என அறிந்து தன் உயிரையும் பொருட்படுத்தாமல் முயன்று அதைப் பறித்தான்; அங்ஙனம் பறித்த அக்கனியைத் தான் உண்ணுமல் அரண்மனை திரும்பியவுடன் அவ்வையார்க்கு ஈந்து மகிழ்ந்தான். அவ்வையார் அக்கனியை உண்டு அமிழ்தினும் இனிய அதன் சுவையை வியந்து பாராட்டினர். அவ்வையார் அக்கனியை உண்ணும்வரை அதன் பெருமையைக் கூருமல், உண்ட பின்னர் அக்கனியைத் தான் பெற்ற வரலாற்றையும், அதனை உண்டவர் சாவாமல் நீண்ட நாள் உயிர் வாழ்வர் என்பதனையும் அதியமான் விளக்கிக் கூறினன்; அதனைத் தானுண்டு நீண்ட நாள் உயிர் வாழ்வதைக் காட்டிலும் அவ்வையார் உண்டால் உலகத்திற்கு நலம் பல விளையும் என்று கருதியே அக்கனியை அவருக்கு ஈந்து மகிழ்ந்ததாக இயம்பினன்.

**உள்ளம் குளிர்ந்த நல்வாழ்த்து**

அதியமானின் தன்னலம் கருதாத் தன்மையை உணர்ந்த அவ்வையார் உள்ளம் அன்பால் நெகிழ்ந்துருகியது. அவனுடைய ஒப்பற்ற ஈகைச் சிறப்பை வியந்து பாராட்டி, "அதியர் கோமானே! நீ பெரிய

மலையுச்சியில் அமைந்த பிளப்பில் இருந்து உயிரை யும் பொருட்படுத்தாது பறித்து வந்த அரிய நெல்லிக் கனியை எனக்கு அளித்தாய். அதன் பெருமை யையும் கூறினையில்லை. நான் சாவாமல் நீண்ட நாள் வாழ வேண்டுமென்று விரும்பிய உன் அன்புடை மையை என்னெனப் போற்றுவேன். நீ ஆலமுண் டும் சாவாத நீலமணிமிடற் றொருவன் போல என்றும் நிலைபெற்று வாழ்வாயாக,'' என்று வாயார வாழ்த் தினார். அது முதல் அவ்வையார் அதியனிடம் முன் னிலும் பன்மடங்கு அன்புடையவராய் அவன் அவைப் புலவராகவும், அறிவுரை கூறும் அமைச்ச ராகவும் அவன் வாழ்வே தன் வாழ்வாகக் கொண் டொழுகி வந்தார்.

தொண்டை மானிடம் தூது செல்லல்

அங்ஙனம் வாழ்ந்துவரும் நாளில் அதியமானு டைய புகழில் அழுக்காறு கொண்ட காஞ்சித் தொண்டைமான் அவனுடன் போர் தொடுக்க ஆயத் தம் செய்து வந்தான். அப்போரைத் தவிர்க்க விரும் பிய அதியமான் அவ்வையாரே அதற்குத் தக்கவர் என எண்ணி அவரைத் தொண்டைமானிடம் தூது விடுத்தான். அவன் விருப்பப்படி அவ்வையார் அர சியல் தூதராய்க் காஞ்சிமாநகர் சென்றார். அவரு டைய பெரும்புகழை அறிந்த தொண்டைமான் அவரை அன்புடன் வரவேற்று உபசரித்தான். தன் ஆற்றலை அவருக்குப் புலப்படுத்த எண்ணிய தொண்டைமான் அவ்வையாரைத் தன் படைக்கலச் சாலைக்கு அழைத்துச் சென்று காட்டினான். அவனு டைய எண்ணத்தைக் குறிப்பாக அறிந்த அவ்வை யார் அதியமானுடைய ஒப்பற்ற வீரத்தை அவனுக்

குப் புலப்படுத்தி அவன் அகந்தையை அடக்கக் கருதினர்.

### புகழ்வதுபோலப் பழித்தல்

நாநலம் வாய்ந்த அம் மூதாட்டியார் தொண்டைமானை நோக்கி, "உன்னுடைய படைக்கலங்கள் யாவும் இங்கு எவ்வளவு காவலாக வைக்கப்பட்டுள்ளன! இவை புத்தம் புதியனவாய் மெருகு குலையாமல் எண்ணெய்ப் பூசப்பெற்றும் மயிற்பீலியும் மாலையும் சூட்டப் பெற்றும் வரிசைப்பட அழகாக வைக்கப்பட்டுள்ளன. ஆனால் என் தலைவனாகிய அதியனின் படைக்கலங்களோ கூர் மழுங்கியும் நுனி ஒடிந்தும் ஓரங்கள் சிதைந்தும் காம்புகள் முறிந்தும் கொல்லனுடைய பணிக்களத்திலேயே கிடக்கின்றன," என்று வியந்து பாராட்டுவார்போலக் கூறினர். தொண்டைமானைப் புகழ்வதுபோலக் கூறினலும், அவன் படைக்கலங்கள் போரில் பயன்படாமல் வெறும் அலங்காரப் பொருள்களாகவே உள்ளமையால் அவன் போர்முகம் அறியாதவன் என்று குறிப்பாக இகழ்ந்தார். அதியமானைப் பழிப்பதுபோலக் கூறி, அவன் போர் பல கண்டவன்; போரில் பயன்பட்டமையாலேயே அவன் படைக்கலங்கள் யாவும் சிதைந்து செம்மைப்படுத்தக் கொல்லன் பணிக்களத்தில் கிடக்கின்றன என்று குறிப்பாகப் புகழ்ந்தார்.

### தூதின் வெற்றி

அவ்வையார் குறிப்பாகக் கூறிய அக்கருத்தை உணர்ந்து தொண்டைமான் நாணினன். பின்னர் அவ்வையார் அதியனின் ஒப்பற்ற வீரத்தை அவனுக்கு விளக்கி உரைத்துப் போரைத் தவிர்த்து

னுட றவு பார அவ

நலத்துக்கு ஏற்றது என்று எடுத்துரைத்தார். அவ்வையாரின் அறிவுரையால் அகந்தை ஒழிந்த தொண்டைமான் போரைக் கைவிட்டு அதியனுடைய நட்பை நாடினுன். அவ்வையாரின் அரசியல் தூது வெற்றி பெற்றது. வெற்றி வீரராய் அவ்வையார் தகடூர் திரும்பினர். அதியமான் அவருடைய நாவன் மையால் விளைந்த நலத்தை வியந்து அவரைப் பெரி தும் பாராட்டினுன்.

## தகடூர் முற்றுகை

தொண்டைமானெடு போர் தவிர்ந்தாலும் மற் ருெரு சமயம் மலையமான் திருமுடிக்காரிக்கும் அதிய மானுக்கும் கடும் போர் மூண்டது. காரிக்கு உதவி யாகப் பெருஞ்சேர லிரும்பொறை என்னும் சேர மன்னன் பெரும் படையுடன் வந்திருந்தான். போர் எனில் தோள் பூரிக்கும் மாவீரனுகிய அதியமான் யாது காரணத்தாலோ கோட்டை வாயிலை அடைத்து உள்ளேயே தங்கியிருந்தான். பகைவர் படை கோட்டையை முற்றுகையிட்டும் கோழை போல் அடைமதிற்பட்டுக் கிடந்த அதியனின் நிலைகண்டு அவ்வையார் மிகவும் வருந்தினர். அவர் அதிய மானை அணுகி, "மாவீரனே! மறப்புலி சீறினல் எதிர்த்து நிற்கும் மான் கூட்டமும் உளதோ? கதிரவன் கொதித் தெழுந்தால் இருள் எதிர்த்து நிற்குமோ? அதுபோல் நீ சினம் கொண்டு போர்க் களம் புகுந்தால் எதிர் நிற்கும் பகைவரும் உளரோ? ஆதலால் அடைபட்டுக் கிடப்பதை விட்டுச் சீறிய சிங்கம் எனப் போருக்குப் புறப்படுவாயாக," என வீரமொழி புகன்றுர்.

**அதியன் புகழுடம்பு பெறல்**

கோழையையும் வீரனுக்கும் அம் மொழியைக் கேட்ட பெருவீரனாகிய அதியமான் வீறுகொண் டெழுந்தான்; போர்க்களம் புகுந்து பகைவரை எதிர்த்துக் கடும்போர் புரிந்தான். எனினும் இறுதி யில் சேரன் எறிந்த வேல் ஒன்று அதியமானின் மார் பில் பாய்ந்து அவன் ஆருயிரைக் குடித்துச் சென் றது. அதியமானின் பொன்னுடம்பு பூமியில் விழ அவன் புகழுடம்பு எய்தினன். அதனை அறிந்து அவ்வையார் கல்லும் கரையுமாறு கதறிப் புலம்பினர். அவன் பிரிவையாற்ருது அவ்வையார் பாடிய கையறு நிலைப் பாடல்கள் பல. அவை கற்பவர் நெஞ்சத்தை நெகிழ்விக்கக் கூடியனவாம்.

**அவ்வையாரின் கண்ணீர்**

"சிறிதளவு மது கிடைத்தாலும் அதனைத் தான் உண்ணுமல் எங்கட்கு ஈந்து மகிழ்வான் அதியன். அதிக அளவு மது கிடைத்தால் யாம் உண்டுமகிழ்ந்து பாட அவன் எஞ்சியதை உண்பான்; சிறிதளவு உணவு கிடைத்தாலும் அதனைப் பலர்க்கும் பங்கிட்டு உண்டு மகிழ்வான்; நரந்தம் பூ மணம் வீசும் தன் கையால் புலவர்களின் தலையைத் தடவி தண்ணளி செய்வான். அவை எல்லாம் கழிந்துவிட்டனவே. அவன் மார்பில் பாய்ந்த வேல் பாணர்கள் கையில் உள்ள பிச்சைப் பாத்திரத்தை ஊடுருவி, இரப்பவர் கைகளில் பாய்ந்து, புலவர்கள் நாவில் சென்று தைத்துவிட்டது. இனி இவ்வுலகில் பாடும் புலவர் களும் இல்லை; பாடுபவர்க்கு ஒன்றும் ஈபவரும் இல்லை. சூட்டிக்கொள்ளப் பயன்படாத பகன்றை மலர்களைப் போல ஈத்துவக்கும் இன்பம் அறியாத

பலர் வாழ்ந்து பயன் என்ன ?" என்று அவ்வையார் அதியனுடைய அரிய பண்புகளைப் பலவாறு பாராட்டிக் கண்ணீர் சொரிந்தார்.

### நாஞ்சில் வள்ளுவன் தந்த பரிசு

அதியமான் இறந்த பின்னர் அவ்வையார் சிறிது காலம் அவன் மகன் பொகுட்டெழினிக்குத் துணையாக இருந்தார். அதன் பின்னர் அவர் ஓரிடத்திலும் நிலையாகத் தங்கியிராமல் தமிழகம் முழுதும் சென்று தமிழ் பரப்பி வந்தார். ஒரு சமயம் நாஞ்சில் மலைத் தலைவனாகிய வள்ளுவன் என்னும் சிற்றரசனைக் கண்டு அவன் ஈகைப் பெருமையை வாழ்த்திப் பாடினார்; அவனிடம் சிறிது அரிசியைப் பரிசிலாக வேண்டினார். அவ் வள்ளலோ அவ்வையாரின் தகுதியையறிந்து பெரிய யானையையே பரிசிலாக ஈந்தான்.

### பழிப்பது போலப் புகழ்தல்

யானைப் பரிசில் பெறற்கரிய பரிசிலாகும். யானையை வைத்துப் போற்றும் அளவுக்குப் பெருஞ் செல்வத்தையும் வழங்கி யானையையும் பரிசாக அளிப்பர். அத்தகைய பரிசு பெற்ற அவ்வையார், "நாஞ்சில் மலைத் தலைவனாகிய வள்ளுவன் மிகவும் அறிவற்றவன் போலும்! இலைக்கறியுணவின்மேல் தூவிச் சமைப்பதற்குச் சிறிதளவு அரிசி வேண்டினால், அவன் தன் தகுதிக்கேற்பப் பெரிய யானையையே பரிசிலாக ஈந்தான். இன்னார்க்கு இன்னது ஈதல் வேண்டும் என்று தெரியாமல் கொடுக்கும் கொடையும் ஒரு கொடையோ?" என்று அவனைப் பழிப்பதுபோலக் கூறி அவனுடைய வரையாத வள்ளன்மையைப் புகழ்ந்து போற்றினார்.

**மூவேந்தரின் ஒற்றுமையைப் போற்றல்**

மற்ெருரு சமயம் சேரமான் மாவெண்கோ, பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்னும் முடியுடை மூவேந்தரும் ஒருங்கிருக்கக் கண்டு அவ்வையார் அளவிலா மகிழ்ச்சி கொண்டார். வீரமும் புகழும் காரணமாக அழுக்காறு கொண்டு பகைத்து வாழும் பண்புடைய அவர்கள் ஒருமனப்பட்டு ஒருங்கிருந்த வியத்தகு காட்சியைக் கண்ட அவ்வையார் அவர்களை நோக்கி, "அந்தணர் வளர்க்கும் முத்தீயைப் போல ஒருங்கு வீற்றிருக்கும் வெண்கொற்றக் குடையையுடைய வேந்தர்களே! நீவிர் இன்று போலவே என்றும் ஒன்றி வாழ்வீர்களாக; வானத்தில் விளங்கும் விண்மீன்களினும் பலவாக உம் ஆயுள் நாள் வளர்க," என வாழ்த்தி மகிழ்ந்தார்.

**பாரி மகளிர்க்குச் செய்த உதவி**

இங்ஙனம் பலவிடங்களுக்கும் சென்று வள்ளல்கள் பலரைப் பாடிப் பரிசு பெற்றுவந்த அவ்வையார் ஒரு சமயம் ஒரு சிற்றூர் வழியே வந்தார். அவ்வூரில் பாரிவள்ளலின் அருமை மகளிர் மூவேந்தரின் சூழ்ச்சியால் தம் தந்தையை இழந்து ஆதரவற்ற நிலையில் சிறுகுடிலில் வாழ்ந்து வந்தனர். அவ்வையார் மழையால் நனைந்து குளிரால் நடுங்கி அக்குடிலுள் நுழைந்தார். அவ்வையாரைக் கண்ட அம்மகளிர் அவரை அன்புடன் வரவேற்று, அவர் மேனி ஈரத்தைத் துடைத்துத் தாங்கள் உடுத்திக்கொள்ள வைத்திருந்த நீலச் சிற்றுடையை அளித்து உடுத்திக் கொள்ளச் செய்தனர்; பின்னர்த் தாங்கள் உண்ணச் சமைத்திருந்த எளிய கீரையுணவினை வழங்கி

உண்ணுமாறு வேண்டினர். அந்த ஏழ்மைநிலையிலும் பாரிமகளிரிடம் காணப்பட்ட ஈகைக் குணத்தினை எண்ணி வியந்த ஔவையார் அவர்களைப் பலவாறு பாராட்டினார்; அவர்கள் அளித்த நீலச் சிற்றுடையைப் புகழ்ந்து போற்றினார்; அவர்கட்கு ஆறுதல் பல கூறித் தம் ஆற்றலால் திருக்கோவலூரையாண்ட மலையமானுக்கு அவர்களை மணம் முடித்து வைத்தார். அவ்வையார் செய்த பேருதவியால் அம் மகளிர் தம் பண்டைய நலன்களை எல்லாம் பெற்றுச் சிறப்பாக வாழ்ந்தனர்.

### திருக்குறள் அரங்கேற்றத்துக்கு உதவல்

இங்ஙனம் வாழ்ந்துவரும் நாளில் அவ்வையார் வள்ளுவரைக் கண்டார்; அவர் இயற்றிய திருக்குறளைக் கண்டு வியந்து போற்றினார். அந்நூல் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலையும் உணர்த்துதல் கண்டு அதனோடு வீட்டுப்பாலையும் சேர்த்துச் சுருங்கச் சொல்லல் என்னும் அழகு பற்றி,

> "ஈதலறம் தீவினைவிட் டீட்டல் பொருளெஞ்ஞான்றும்
> காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
> பட்டதே இன்பம் பரனைநினைந் திம்மூன்றும்
> விட்டதே பேரின்ப வீடு"

என்னும் அழகியதோர் வெண்பாவைப் பாடினார். பின்னர் அவர் வள்ளுவரோடு மதுரைக்குச் சென்று திருக்குறளைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்ற உதவி புரிந்தார் எனவும், திருக்குறளின் மாண்பினை வியந்து,

> "அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
> குறுகத் தறித்த குறள்,"

என அதனைப் பாராட்டிப் புகழ்ந்தார் எனவும் பழைய வரலாறு கூறுகிறது.

**சிலையமைத்த சிறப்பு**

இங்ஙனம் பார்புகழ வாழ்ந்த அவ்வை மூதாட்டியாரின் வரலாற்றை முழுமையாக அறிந்துகொள்ள வாய்ப்பு இல்லாமற் போனது தமிழரின் தவக் குறைவே. எனினும் அவர் பாடிய பாடல்கள் பல சங்க இலக்கியங்களில் இடம்பெற்று அவருடைய புகழுருவாய் விளங்குதல் தமிழ் செய்த தவமேயாகும். புகழுருவிற் பொலியும் அவ்வைப் பெருமாட்டியார்க்கு உலகத் தமிழ் மாநாட்டில் சிலையமைத்துச் சிறப்பித்தது தமிழ் மக்களின் நன்றியுணர்வுக்கும், தமிழ் மொழியிடத்தும் தமிழ்ப் புலவர்களிடத்தும் தமிழ் மக்களுக்குள்ள பேரன்புக்கும் பெருமதிப்புக்கும் சான்றாகும். சிலையாகி நிற்கும் அவ்வை மூதாட்டியார் பெண்ணினத்தின் அறிவுப் பெருமைக்குச் சான்றாய் இக்காலத் தாய்க்குலத்துக்கு வழிகாட்டும் ஒளி விளக்காய் விளங்குவார் என்பதில் ஐயம் இல்லை.

# 3. கற்பரசி கண்ணகி

தமிழ் என்றவுடன் அதன் இனிமைச் சுவை நம் நெஞ்சில் ஊறுவதுபோலக் கற்பு என்றவுடன் பத்தினித் தெய்வமாகிய கண்ணகியின் எண்ணமே நம் மனத்தில் தோன்றும். தமிழ்ப் பெண்கள் கற்பையே தம் உயிராகக் கொண்டொழுகுபவர்கள். அத்தகைய பெண் குலத்தின் பொன் விளக்காகத் திகழ்பவள் கற்பரசி கண்ணகி. தன் கணவனுக்குற்ற கடும் பழியைப் போக்க அரசவை ஏறி வழக்குரைத்துத் தன் கற்பின் ஆற்றலால் மதுரை மூதூர் மாநகர் சுட்டுத் தன் கணவனுடன் வானகம் புக்குத் தெய்வமான கண்ணகியின் கற்பு மறக்கற்பு என்றும் வீரக் கற்பு என்றும் போற்றப்படுகிறது. தமிழ்ப் பெண்களின் அறிவுக்கும் ஆற்றலுக்கும் அன்புக்கும் வீரத்துக்கும் தன்னலம் கருதாத தியாக உணர்விற்கும் கலங்கரை விளக்கமாக விளங்கிய அக் கற்பரசியின் பெருமையைச் சுருக்கமாக அறிவோம்.

**கண்ணகியின் இன்ப வாழ்வு**

சோழப் பெருநாட்டின் தலைநகராக விளங்கிய புகழ் மிக்க காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த பெருங்குடி வணிக மரபைச் சார்ந்த மாநாய்கன் என்ற வணிகரின் மகள் கண்ணகி. அவள் அழகில் திருமகளையும் அறிவில் கலைமகளையும் கற்பில் அருந்ததியையும் நிகர்த்தவள். அவளைப் புகார் நகரில் வாழ்ந்த இருநிதிக் கிழவனையொத்த பெருநிதிச் செல்வராகிய மாசாத்துவான் என்னும் வணிகரின் மகனாகிய

கோவலன் ஆன்ருேர் வாழ்த்த இன்ப மணம் கொண்டான். இவ்விருவரும் கருத்தொத்த காதலர்களாய் இல்லறமென்னும் நல்லறமாற்றி வந்தனர். கோவலன் கற்புச் செல்வியாகிய கண்ணகியை மலையிடைப் பிறவாமணி என்றும், அலையிடைப் பிறவா அமிழ்தம் என்றும், யாழிடைப் பிறவா இசையென்றும் பலவாறு பாராட்டி அவள் நெஞ்சம் கவர்ந்த அன்புடையவனய் இனிது வாழ்ந்து வந்தான்.

**கோவலன் பிரிவும் கண்ணகியின் துயரும்**

இங்ஙனம் வாழ்ந்த கண்ணகியின் இன்ப வாழ்வில் விதி குறுக்கிட்டது. புகார் நகரப் பூங்கொடியாகிய மாதவி என்னும் கலையரசியின் ஆடல் பாடல்களிலும் அழகிலும் உள்ளத்தைப் பறிகொடுத்த கோவலன் தன் மனையையும் மனைவியையும் மறந்து அவளோடு வாழ்ந்து வந்தான். கணவனைப் பிரிந்த கண்ணகி நல்லாள் துன்பத்தால் துடித்தாள். அவள் அன்பு நெஞ்சம் கலங்கியது; எனினும் துன்பத்தை ஆற்றியிருத்தலே கற்புக்கடம் பூண்ட பொற்புடை நங்கையரின் கடன் என உணர்ந்த அவள் பிரிவுத் துயரமே ஓர் உருக்கொண்டது போல வாழ்ந்து வந்தாள்.

**கண்ணகியின் கற்பு மாண்பு**

நாட்கள் மாதங்களாய், மாதங்கள் ஆண்டுகளாய்க் கழிந்தன. ஒரு நாள் கண்ணகியின் இளம் பருவத் தோழியான தேவந்தி என்பவள் அவளுடைய துயரத்தை அறிந்து ஆறுதல் கூறவந்தாள். அவளிடம் கண்ணகி தான் கண்ட தீக் கனவைக்கூறி, அதனுல் தன் கணவனுக்கு என்ன தீங்கு நேருமோ என்று வருந்தினுள். அது கேட்டுத் தேவந்தி

காவிரி கடலோடு கலக்கும் இடத்தில் உள்ள சோம குண்டம், சூரிய குண்டம் என்னும் பொய்கைகளில் நீராடிக் காமவேள் கோட்டம் தொழுதால் கணவரைப் பிரியாமல் வாழலாம் என்று கூறினாள். தேவந்தியின் வாய்மொழி கேட்டுக் கண்ணகி, "கற்பு நலம் வாய்ந்த பெண்களுக்குக் கணவனே தெய்வம். அத்தகைய கற்பு நெறியை மேற்கொண்டொழுகும் எனக்குப் பொய்கை புக்காடித் தெய்வம் தொழுவது பீடு அன்று" என்று கூறி மறுத்துவிட்டாள். கண்ணகியின் கற்பு மாண்பினை என்னென்பது!

**கோவலன் வருகை**

கண்ணகி இவ்வாறு கூறிக் கொண்டிருக்கும் போது மாலை நேரம் வந்தது. அப்போது பணிமகள் ஒருத்தி ஓடிவந்து கோவலன் வருவதாகக் கூறினாள். இந்திர விழாவின் இறுதி நாளில் கடற்கரையில் மகிழ்ந்திருந்த கோவலன், விதிவலியால் மாதவியுடன் மாறுகொண்டு அவளை வெறுத்துத் தன் மனையகம் நாடிவந்தான். கோவலன் வரவுணர்ந்த கண்ணகி மகிழ்ந்து எதிர்கொண்டாள். தன் பிரிவால் வாடி வருந்திப் பொலிவு குன்றியிருந்த அம் மாதரசியை நோக்கிக் கோவலன் நெஞ்சம் நெகிழ்ந்துருகினான்.

**அன்பின் அற்புதம்**

அவன் தன் அன்பு மனைவியை நோக்கி, "பொய்யையே மெய்யாகக்காட்டி ஒழுகும் வஞ்சனை நிறைந்த மாதவியுடன் வாழ்ந்து குன்றனைய பெருஞ் செல்வத்தை இழந்தேன்; நாணமும் இழந்தேன்; இவ்வறுமை எனக்கு வெட்கத்தையும் வேதனையையும் அளிக்கிறது," என்று கழிந்தவை குறித்து வருந்தி

ஞன். கற்பின் செல்வியாகிய கண்ணகி மாதவிக்கு அளிக்க மாண்பொருள் இல்லாமையாலேயே அவன் வருந்துகிருன் என நினைத்துத் தன் முகத்தில் புன் முறுவலைத் தோற்றுவித்து, "என்னிடம் இரு சிலம்பு கள் உள்ளன. அவற்றை விற்றுப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்," என்று பகர்ந்தாள். கண்ணகியின் அன்பின் திறந்தான் என்னே!

### கோவலன் மதுரைக்குப் புறப்படல்

கண்ணகியின் அன்புளம் அறிந்த கோவலன் தன் செயலுக்கு நாணினுன் அவன் மனத்தில் ஒரு புத்துணர்ச்சி தோன்றியது. அவன் தன் அன்பு மனையாளை நோக்கி, "நாடுபுகழ வாழ்ந்த இங்கு நல மிழந்து வறியனுய் வாழ நான் விரும்பவில்லை. உன் சிலம்பையே வாணிக முதலாகக் கொண்டு வாணிகம் புரிந்து பெரும் பொருள் ஈட்டத் துணிந்துள்ளேன். நீயும் என்னுடன் மதுரை மாநகருக்கு வருவாயாக," என்ருன்.

### குலப்பிறப் பாட்டியின் பெருந்தன்மை

கணவனுடைய மனமாற்றத்தை அறிந்த கண் ணகி தனக்கு நல் வாழ்வு மலர்ந்துவிட்டது என்று பெருமகிழ்ச்சி கொண்டாள். கணவனை யன்றித் தனக்கு வேறு காவல் இல்லை என்பதை உணர்ந்த அக்கற்பரசி கோவலன் தன்னை மறந்து வாழ்ந்ததை எல்லாம் மறந்துவிட்டாள். அவன் 'மதுரைக்கு வருக' என்றவுடன் பெற்ற தாயையும் பேணிய தந்தையையும் உற்ற சுற்றத்தையும் மறந்து கைப் பிடித்த கணவனே பெருந்துணையாக அவனுடன் புறப்பட்டாள் கண்ணகி. கோவலன் அன்று இரவே

கண்ணகியை அழைத்துக் கொண்டு ஒருவரிடமும் சொல்லாமல் மதுரைக்குப் புறப்பட்டான்.

### கவுந்தியடிகளின் துணை

மதுரை செல்லும் வழியில் மாதவத்தாட்டியாகிய கவுந்தியடிகளின் துணை அவர்கட்குக் கிடைத்தது. அவர்கள் காவிரிக் கரைவழியே சென்று உறையூரைக் கடந்து பல நாட்கள் வழிநடந்து மதுரையைக் குறுகினர்; மதுரை மாநகரையடுத்த ஒரு புறஞ்சேரியில் தாபதப் பள்ளியொன்றில் தங்கினர். அப்போது மாதரி என்னும் ஆயர்குலமடந்தையொருத்தி கவுந்தியடிகளைக் கண்டு அடிதொழுதாள். அவளுடைய அருள் உள்ளத்தையும் நல்லொழுக்கத்தையும் அறிந்த கவுந்தியடிகள் கண்ணகியை அவளிடம் அடைக்கலமாகத் தருதல் நன்று எனக் கருதினர்.

### மாதரியிடம் அடைக்கலப்படுத்தல்

அவர் மாதரியை நோக்கி, "மாதரி! இப் பெண் செல்வக் குடியில் பிறந்தவள். இவள் கணவனாகிய இக் கோவலனின் தந்தையின் பெயரைக் கேட்டால் இம் மதுரை மாநகரத்து வணிகர்கள் அரும் பொருள் பெற்றவர்களைப் போல இவர்களை விருந்தினராக எதிர்கொண்டு போற்றுவர். அங்ஙனம் இவர்கள் தக்க இடம் செல்லும் வரை இவளை உன்னிடம் அடைக்கலமாக ஒப்புவிக்கின்றேன். என்னொடு வந்த இவ்விளங்கொடி நங்கையின் அழகிய பாதங்களை நிலமகளும் கண்டறியாள். அத்தகைய உயர் குடியில் பிறந்த இவள் தன் காதலன் பொருட்டுக் கல்லிலும் முள்ளிலும் நடந்து வந்தாள்; தன் துன்பத்தைப் பொருட்படுத்தாமல் தன் கணவன் துயரத்தைக் கண்டு கண்ணீர் சொரிந்தாள்.

பெண்களுக்கு இன்றியமையாத கற்பையே கடலுகக் கொண்ட இப் பத்தினித் தெய்வத்தைத் தவிர வேறு தெய்வம் உண்டோ? இத்தகைய தெய்வக் கற்புடை யாளை நன்னீராட்டி, கண்களுக்கு மைதீட்டி, தூய ஆடையுடுத்தி, இவளுக்குத் தோழியும் தாயும் நீயா கவே இருந்து காப்பாயாக," என்று கண்ணகியின் அருமை பெருமைகளை எடுத்துரைத்தார்.

**கோவலன் நடந்தது குறித்து வருந்துதல்**

மாதவத்தாட்டியின் ஆணையை மேற்கொண்டு மாதரி, கண்ணகியையும் கோவலனையும் தன் இல் லத்திற்கு அழைத்துச் சென்றாள்; அங்கு அவர்கள் சமைத்துண்டு இனிது வாழ எல்லா வசதிகளையும் செய்து தந்து, தன் மகள் ஐயை என்பாளையும் கண் ணகிக்குத் துணையாக வைத்தாள். கண்ணகி தன் கையால் உணவு சமைத்துத் தன் காதலனை உண் பித்து அடைக்காயும் வெற்றிலையும் ஈந்து மகிழ்ந் தாள். கண்ணகியின் அன்புடைமையை அறிந்த கோவலன் நெஞ்சம் நெகிழ்ந்துருகினான். அவன் கண்ணகியை நோக்கி, "அன்புச் செல்வியே! கன் னெஞ்சனாகிய என்னால் உனக்கு எவ்வளவு துன்பம்! வீணருடன் கூடித் தீ நெறியில் வாழ்ந்த பாவியாகிய எனக்கும் நற்கதியுண்டோ? என் தாய் தந்தையர் மனத்தைப் புண்படுத்தி உனக்கும் சிறுமை செய்த நான் 'வருக' என்று அழைத்தவுடன் மறுமாற்றம் கூறாமல் என்னுடன் வந்தனையே. உன் பேரன்பை என்னென்பேன்!" என்று மனம் கலங்கிக் கூறினான்.

**கண்ணகியின் கற்புடைமை**

அவ்வுரை கேட்ட கண்ணகி, "அன்பரே! தாங் கள் என்னைப் பிரிந்து வாழ்ந்தபோது அறவோரை

யும் அந்தணரையும் துறவிகளையும் போற்றுதலும் விருந்தினரை உபசரித்தலும் ஆகிய இல்லறக் கடமைகளை இனிதின் ஆற்ற முடியவில்லையே என்ற எண்ணம்தான் என் நெஞ்சை வருத்தியது. மேலும் தங்கள் தாய் தந்தையர் துன்பப்படுமாறு தாங்கள் தவருன ஒழுக்கத்தை மேற்கொண்டு வாழ்வது குறித்தும் நான் வேதனைப்பட்டேன். எனினும் கணவன் சொல் திறம்பாமல் வாழ்வதே கற்புடைய காரிகையர்க்கு அழகு ஆதலின் தாங்கள் 'வருக' என்றவுடன் தங்களுடன் வந்தேன்,'' என்று இனிமையாக எடுத்துரைத்தாள்.

### கோவலன் கொலைப்படல்

கண்ணகியின் கற்பின் திறத்தினை எண்ணி வியந்த கோவலன், "என்னோடு போந்து என்துயர் களைந்த பொன்னே! கொடியே! கற்பின் கொழுந்தே! பொற்பின் செல்வியே ! உன் சிலம்புகளில் ஒன்றைக் கொண்டு சென்று விற்று வருவேன். நீ வருந்தாது இருப்பாயாக,'' எனக் கூறிச் சிலம்பைப் பெற்றுச் சென்றனன். அங்ஙனம் சென்றவன் ஊழ்வினை வயத்தால் சிலம்பு திருடிய கள்வனென்று பொற்கொல்லன் ஒருவனுல் குற்றம் சாட்டப்பட்டான். அதனை உண்மையென நம்பிய பாண்டிய மன்னன் ஆராயாது, "அவனைக் கொன்று அச்சிலம்பைக் கொண்டு வருக,'' என்று ஆணையிட்டான். அதன்படியே கல்லாக் களிமகன் ஒருவன் கோவலனைக் கொன்று வீழ்த்திச் சிலம்பைக் கவர்ந்து சென்றுன்.

### கண்ணகியின் துயரம்

இச்செய்தி மாதரி மனையிலிருந்த கண்ணகியின் செவிக்கு எட்டியது. அவள் பொங்கி எழுந்தாள் ;

நிலத்தில் விழுந்து புரண்டாள்; செங்கண் சிவப்ப அழுது புலம்பினாள்; அரசன் ஆராயாது இழைத்த அநீதியால் நான் என் அன்பனை இழந்தேனே என்று ஏங்கினாள்; கதிரவனை நோக்கி, "காய்கதிர்ச் செல்வனே! நீ யறிய என் கணவன் கள்வனோ?" என்று முறையிட்டாள். அப்போது, "உன் கணவன் கள்வன் அல்லன்; அவனைக் கள்வனென்று கூறிய இந்நகரை எரியுண்ணும்," என்று வானினின்று ஒரு குரல் எழுந்தது. அது கேட்டு அனைவரும் அஞ்சி நடுங்கினர்.

### கற்பரசியின் சூளுரை

கதிரவன் வாய்மொழி கேட்ட கண்ணகி சீறி எழுந்தாள்; தன் மற்றொரு காற்சிலம்பினைக் கையில் ஏந்தி, "முறையற்ற அரசன் ஊரிலிருந்து வாழும் குறைவற்ற பத்தினிப் பெண்களே! என் கணவன் கள்வனல்லன். என் காற்சிலம்பைக் கவரும் பொருட்டே அவன் மேல் இவ்வடாப் பழியைச் சுமத்தினர். நான் கற்பு நெறி வழுவாத காரிகை என்பதுண்மையாயின் உங்கள் முன்னர் என் காதற் கணவனைக் காண்பேன்; அவன் வாயால் தீதறு நல்லுரை கேட்பேன்; இன்றேல் என்னை நீங்கள் எள்ளி நகையாடுவீர்களாக," என்று சூளுரைத்து அழுது புலம்பியவாறே சென்றாள். அவளுடைய அவல நிலையைக் கண்ட மதுரை நகரத்தார் மிகவும் அச்சமுற்றனர்.

### கற்பினால் விளைந்த அற்புதம்

காலையில் தன்பால் இன்புடன் அளவளாவிச் சென்ற தன் காதற் கணவன் மாலையில் பொன்னிற மேனி புழுதியிற் படிய விழுந்து கிடக்கும் அவலக்

காட்சியைக் கண்ட கண்ணகி கதறிப் புலம்பினுள் ; அவனுடைய உடலைத் தன் மென் கைகளால் தழுவினுள். அப்போது அவளுடைய கற்பின் ஆற்றலால் ஓர் அற்புதம் நிகழ்ந்தது. இறந்து கிடந்த கோவலன் உயிர்பெற்று எழுந்தான். அவன் கண்ணகியை நோக்கி, "நின்மதி போலும் முகம் வாடியதே," என்று கூறித் தன் கையால் அவள் கண்ணீரைத் துடைத்தான். கண்ணகி அளவிலா உவகை கொண்டு அவன் பாதங்களிற் பணிந்தாள். கோவலன், "நீ இங்கேயே இரு," என்றுரைத்து வானவர் எதிர் கொள்ள வானுலகம் புக்கனன். அவன் பொன்னுடல் மீண்டும் புழுதியில் விழுந்தது. அது கண்டு கண்ணகி "ஆ! இஃது என்ன மாயமோ? அல்லது கனவோ? நான் எங்குச் சென்று என் கணவனைத் தேடுவேன்?" என்று பதறினுள். அவளுக்கு அளவிட முடியாத வெஞ்சினம் பொங்கியது. உடனே அவள், "எனக்கு இத்தீவினை புரிந்த தீவேந்தனைக் கண்டு இத்தீத் திறம் கேட்பேன்," என்று எழுந்தாள்.

**பாண்டியன் முன் பத்தினித் தெய்வம்**

அரண்மனை வாயிலை அடைந்த கண்ணகி வாயிலோன் மூலம் தன் வரவை அரசனுக்கு உணர்த்தி அவன் முன் சென்று நின்ருள். கையில் ஒற்றைச் சிலம்பும், கண்ணில் பெருகும் நீரும், விரித்த கூந்தலும், புழுதி படிந்த உடலும் உடையவளாய்த் தன் முன் நின்ற கண்ணகியைக் கண்டவுடன் மன்னன் மனம் கலங்கினுன் ; இவளுக்கு என்ன தீங்கு நேர்ந்து விட்டதோ என்று ஏங்கினுன். அவன் கண்ணகியை நோக்கி, "நீர் ஒழுகும் கண்களையுடையவளாய் என் முன் வந்த நீ யார் அம்மா?" என்று கேட்டான்.

### கண்ணகியின் வீரவுரை

அது கேட்ட கண்ணகி, "ஆராய்ச்சித் திறன் இல்லாத அரசனே! உன்பால் முறையிட வேண்டிய குறையொன்றுடையவள் யான். அறப்பப் புறவின் உயிரைக் காக்கத் தன்னுருயிரை வழங்க முன் வந்த சிபி வேந்தனும், கன்றை இழந்த தாய்ப் பசுவின் கண்ணீரைக் கண்டு தன் ஒரே மகனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்று நீதி வழங்கிய மனுச்சோழனும் ஆண்ட புகழ் மிக்க புகார் என் பதியாகும். வாழ்தல் வேண்டி ஊழ்வினை வயத்தால் உன் நாட்டை அடைந்து நின்றல் கள்வன் என்று குற்றம் சாட்டிக் கொலை செய்யப்பட்ட கோவலன் மனைவி நான். என் பெயர் கண்ணகி," என்று வீரமுடன் மொழிந்தாள்.

### வழக்குரைத்து வெல்லல்

கண்ணகி தன் மீது சுமத்திய குற்றத்தை உணர்ந்த கொற்றவன், "பெண்ணணங்கே! கள்வனைக் கோறல் கடுங்கோலன்று; அரச நீதியே," என்றுரைத்தான். "உண்மையை உணரும் திறம் அற்ற மன்னனே! என் காற் பொற்சிலம்பினுள்ளே உள்ள பரல்கள் யாவும் மாணிக்கங்கள்," என்றாள் கண்ணகி. மன்னன், "என் சிலம்பினுள் உள்ள பரல்கள் முத்துக்கள். இதனைக் கொண்டு உண்மை காண்போம்,"என்றுஉரைத்துக்கோவலனிடமிருந்து கவர்ந்த சிலம்பினைக் கொண்டுவரப் பணித்தான். அச் சிலம்பினைப் பெற்ற கண்ணகி பெருஞ் சினத்துடன் அதனைத் தரையில் ஓங்கி எறிந்தாள். சிலம்பு தூள் தூளாயிற்று. அதனுள்ளிருந்து மாணிக்கக் கற்கள் சிதறின. பாண்டியன் இழைத்த கொடுமை

யைக் காட்டுவது போல் மாணிக்கம் ஒன்று மன்னன் முகத்தில் தெறித்தது.

**பாண்டியன் உயிர் துறந்து நீதி காத்தல்**

மாணிக்க மணிகளைக் கண்ட தென்னவன் திகைத்தான். ஆராயாது இழைத்த அநீதி அவன் நெஞ்சை வாட்டியது. அவன் குடை தாழ்ந்தது. செங்கோல் தளர்ந்தது. "ஒரு பொற்கொல்லனின் சொற் கேட்டுத் தீவினை புரிந்த யானோ அரசன்? யானே கள்வன். மன்பதை காக்கும் தென்புலம் காவல் என்னால் அழிந்ததே! பாண்டிய மரபுக்கே என்னால் பெரும் பழிவந்து சூழ்ந்ததே! இனி நான் உயிர் வாழேன்! கெடுக என் ஆயுள்," எனக் கூறி அரியணையிலேயே மயங்கி விழுந்தான். அவனுயிர் நீங்கியது. கணவன் மாய்ந்தது உணர்ந்த கற்பரசி யாகிய கோப்பெருந்தேவியும் தன்னுயிர் கொண்டு அவனுயிரைத் தேடிச் செல்பவள் போல உயிர் விட்டாள். மதுரை மாநகரைத் துன்பம் சூழ்ந்தது.

**கண்ணகியின் கற்புத் தீ**

கண்ணகி அதனோடொழியாமல் சீறிச் சினந்து மதுரை நகர வீதியை அடைந்தாள்; "கற்பு நெறி வழுவாத பொற்புடை நங்கையர் வாழும் புகார் நகரில் பிறந்த நானும் ஒரு பத்தினி என்பது உண்மையானால் இம் மதுரை மாநகரையே எரித்தழிப்பேன்," எனச் சூளுரைத்தாள். செந்தீக் கடவுள் அவள் முன் வந்து பணிந்து நின்றான் கற்பரசி அவனை நோக்கி, "மூத்தோர், குழந்தைகள், பசு, பத்தினிப் பெண்டிர் இவர்களை விட்டுத் தீத்திறத்தோர் பக்கம் சேர்க," என ஏவினாள். உடனே பெருந்தீ மூண்டது. மதுரை மாநகரம் செந்தழலில் வெந்தழிந்தது.

**மதுராபதியின் முறையீடு**

கற்பரசியின் சீற்றத்தால் மாட மதுரை வெந்து நீருவதைக் கண்டு மனம் பொருத மதுராபதித் தெய்வம் அம்மாபெரும் பத்தினியின் முன்வர அஞ்சிப் பின்னின்று குரல் கொடுத்தது. கண்ணகி திரும்பாமலேயே தன் முகத்தை மட்டும் சிறிது அசைத்து, 'நீ யார்?' என வினவினள். மதுராபதித் தெய்வம், ''நான் இந்நாட்டின் காவல் தெய்வம். பாண்டியன் வழி வழி நீதி தவருத மரபில் வந்தவன். அவன் தவறு ஒன்றும் செய்திலன். முற்பிறவியில் உன் கணவன் செய்த தீவினையே இப் பிறவியில் அவனுக்கு இத் தீங்கினை விளைத்தது. இன்று பதினன்காம் நாள் நீ நின் கணவனைத் தெய்வ யாக்கையில் சென்று அடைவாய். நின் சீற்றம் தவிர்க,'' என வேண்டி நின்றது. அக் கற்பரசியின் சீற்றம் சிறிது தணிந்தது. மூண்டெரிந்த நெருப்பும் அடங்கியது.

**கண்ணகி சேர நாடடைதல்**

பின்னர்க் கண்ணகி தன்னல் மதுரை மாநகரத்துக்கு ஏற்பட்ட பேரழிவினை எண்ணி மிகவும் வருந்தினள். அவள் தன் கணவனைக் கண்டபின் அல்லது நில்லேன் எனப் புறப்பட்டுக் கால் சென்ற வழியே நடந்து சென்ருள். வையையின் கரை வழியே பதினன்கு நாட்கள் மேடு பள்ளம் என்று பாராமல், பசி நோய் களைப்பு என்பது இல்லாமல் வழி நடந்த கண்ணகி, சேர நாட்டைச் சேர்ந்த நெடுவேள் குன்றத்தில் அடிவைத் தேறி ஒரு வேங்கை மர நிழலில் நின்றனள்.

**பத்தினித் தெய்வம்**

அப்போது கோவலன் தெய்வ வடிவில் தேவர்கள் புடைசூழ வானவூர்தியில் வந்து கண்ணகியை

அழைத்துச் சென்றான். அவ்வியத்தகு காட்சியைக் கண்ட குன்றக் குறவர்கள் தம் அரசனாகிய செங்குட்டுவனுக்கு உணர்த்தினர். சாத்தனார் என்ற புலவர் வாயிலாகப் பத்தினித் தெய்வமாகிய கண்ணகியின் பெருமையை அறிந்த அம் மன்னன் அவளைத் தெய்வமாக்கி வழிபட விரும்பினான். இமயத்தில் கல் எடுத்துக் கங்கையில் நீராட்டி, அக் கல்லில் கண்ணகித் தெய்வத்தின் திருவுருவைச் செதுக்கி, வஞ்சியில் கோயில் அமைத்துப் பெரு விழாச் செய்தான். கண்ணகி தெய்வ வடிவில் மன்னனுக்கும் மற்றவர்க்கும் பேரருள் புரிந்தாள்.

### காவியக் கோயில்

சேரன் செங்குட்டுவன் பத்தினித் தெய்வத்திற்குக் கற்கோயிலமைத்து வழிபட்டான். அவன் தம்பி இளங்கோவடிகளோ அக் கற்பரசியின் பெருமை பாருள்ளளவும் நீருள்ளளவும் அழியாமல் நிலைபெறும் வண்ணம் சொற் கோயிலமைத்து வழிபட்டார். செங்குட்டுவன் அமைத்த கற்கோயில் காலப் போக்கில் இருந்தவிடம் தெரியாமல் மறைந்துவிட்டது. இளங்கோ அமைத்த காவியக் கோயிலோ—'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்' என்னும் செஞ்சொற் காவியமோ—காலத்தை வென்று, கற்பரசி கண்ணகியின் பெருமையை இக் கன்னித் தமிழ்நாட்டார்க்கு உணர்த்தி, உணர்ச்சியூட்டி நிற்கிறது.

### கண்ணகி சிலை

உலகத் தமிழ் மாநாட்டில் கற்பரசி கண்ணகிக்குச் சிலையமைத்துச் சிறப்பித்தது செங்குட்டுவன் செய்த

சீரிய செயலை நினைவூட்டுவதாக உள்ளது. கற்புத் தெய்வமாகிய கண்ணகிக்கு அமைத்த அச்சிலை சிலம்பு பாடிய சேர நாட்டிளவரசர் இளங்கோவுக்கும் அமைத்த சிலையாகவே கொள்ளத் தக்கதாகும். பெண்ணினத்தின் பெருமைக்கு ஓர் எடுத்துக்காட்டாய்ப் பொலியும் அச்சிலை தமிழகத்தின் தாய்க்குலம் எவ்வாறு வாழவேண்டும் என்பதை அவர்கட்கு நினைவூட்டும் சிலையாகவும் விளங்கும். ஆகவே இக்காலத் தாய்மார்களும் கண்ணகியைப் போன்ற அன்பும், வீரநெஞ்சமும், உலையாத கற்பும் உடையவர்களாய், தாங்கள் கற்பரசி கண்ணகியின் வழிவந்தவர்கள் என்பதை விளக்குபவர்களாய்த் திகழ்வார்களாயின் அதுவே அக்கற்பரசிக்கு நாம் அமைக்கும் அழியாத சின்னமாகும்.

# 4. கவிச்சக்கரவர்த்தி கம்பர்

'தமிழுக்குக் கதியாவார் இருவர்' என்பது நம் நாட்டில் தொன்று தொட்டு வழங்கும் தொடராகும். அவ்விருவர் யாவர் என்பதைக் 'கதி' என்ற சொல்லே உணர்த்தும். 'க' என்பது கம்பரையும், 'தி' என்பது திருவள்ளுவரையும் குறிக்கும் என்பர். அறநூல் இயற்றியவர்களுள் வள்ளுவர் முதன்மையானவர். காவியம் இயற்றியவர்களுள் கம்பரே தலைசிறந்தவர். கம்பர் இயற்றிய காவியம் தமிழில் பெரிய காவியமாய், சொல்லழகும் பொருளழகும் நிறைந்ததாய், ஒன்பான் சுவைகளுக்கும் நிலைக்களமாய், தொட்ட இடமெல்லாம் இனிக்கும் சர்க்கரைப் பதுமையாய்த் திகழ்கிறது.

### சிறந்த இலக்கியம்

ஒரு சிறந்த இலக்கியம் அது தோன்றிய காலத்து மக்களுடைய வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்கள் நாகரிகச் சிறப்பு முதலியவற்றைத் தன்னுட் கொண்டு காட்டும் கண்ணாடியாகும். அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாய்த் திகழ்வது கம்பர் இயற்றிய இராமாயணம். கம்பர் தாம் இயற்றிய இராம கதைக்கு வடமொழி வான்மீகி இராமாயணத்தை முதல் நூலாகக் கொண்டாலும் அதன் மொழி பெயர்ப்பாக அமைந்து விடாமல் தம் கவிப் பெருமையை விளக்கும் ஒப்பற்ற காவியமாக இராமாயணத்தை ஆக்கியுள்ளார்; கதைப் போக்கிலும் சில

இடங்களில் தமிழ்நாட்டின் பழக்க வழக்கங்கள், பண்பாடுகளுக்கு ஏற்ப மாறுதல்களைச் செய்து, தமிழ் மக்கள் விரும்பிச் சுவைக்கும் நல்விருந்தாகப் படைத்துள்ளார்.

## தமிழுக்குப் பெருமை தரும் காவியம்

கம்பர் காவியத்தில் சங்க இலக்கிய நயங்கள் சுடர் விட்டொளிர்கின்றன. சிலப்பதிகாரம், சிந்தாமணி போன்ற காவியங்களின் கவிச்சுவைகள் ததும்புகின்றன. திருக்குறளின் அரிய கருத்துக்கள் ஆங்காங்கே அணி செய்கின்றன. இத்தகைய ஒப்புயர்வற்ற காவியத்தை ஆக்கி அளித்த பெருஞ் சிறப்பினாலேயே அவர் 'கவிச்சக்கரவர்த்தி' என்னும் பெரும் புகழ்க்கு உரியவரானார். கம்பராமாயணத்தால் தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டிற்கும் ஏற்பட்ட பெருமை அளவிடற் பாலதன்று. அதனாலேயே மகாகவி பாரதியார் 'கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்று கவி பாடிக் களித்தார். கம்பர் இராமாயணத்தைத் தவிர ஏரெழுபது, திருக்கை வழக்கம், சரசுவதி யந்தாதி என்னும் வேறு நூல்களையும் இயற்றியுள்ளார் என்று கூறுவர்.

## பெயரும் காலமும்

இங்ஙனம் பெரும்புகழ்க்கு உரியவராக விளங்கிய கம்பரின் வரலாறு தெளிவாக விளங்கவில்லை. இவர் சோழ நாட்டில் பிறந்தவர் என்பர். காளிகோயிலில் கம்பத்தினடியில் அநாதைக் குழந்தையாய்க் கிடந்த இவரை அக்கோயில் பணி செய்வோன் கண்டெடுத்து வளர்த்தான் என்றும், கம்பத்தினடியில்

கிடந்தமையால் 'கம்பன்' என்று பெயரிட்டான் என்றும் சிலர் கூறுகின்றனர். சோழ நாட்டில் 'கம்பநாடு' என்னும் பகுதியில் பிறந்தவராதலால் 'கம்பநாடர்' என வழங்கிய பெயரே நாளடைவில் கம்பர் எனச் சுருக்கமாக வழங்கலாயிற்று என்பர் ஆராய்ச்சியாளர். கம்பர் காலத்தைப் பற்றியும் கருத்து வேறுபாடு உள்ளது. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பர் சிலர்; பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பர் சிலர். கம்பர் தம் காவியத்திற்குச் சிந்தாமணிச் செய்யுள் நடையையே மேற்கொண்டார் என்பது தெளிவாக விளங்குதலின் சிந்தாமணி தோன்றிய பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னரே கம்பர் வாழ்ந்திருத்தல் வேண்டும் என்பர் ஆராய்ச்சியாளர். கம்பர் குலோத்துங்கனுடைய அவைப் புலவராகத் திகழ்ந்தார் என்னும் வரலாற்றை ஒட்டிப் பார்க்கும்போது அவர் கி. பி. 12 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று கொள்வதே பொருத்தமாகும்.

## வாழ்க்கை வரலாறு

கம்பரைப் பற்றிய செய்திகள் பலவும் ஆராய்ச்சிக்கு உரியனவாகவே உள்ளன. செவிவழிச் செய்திகளாகவும், தனிப்பாடல் திரட்டில் கம்பர் பாடியனவாகக் காணப்படும் செய்யுள்கள் குறிக்கும் நிகழ்ச்சிகளாகவும் உள்ளனவற்றைத் தொகுத்துக் கம்பர் வரலாற்றை அறிஞர்கள் ஊகித்து எழுதியுள்ளனர். அவற்றை உண்மையெனக் கொள்வதற்குரிய ஆதாரங்கள் இல்லை; எனினும் அவை கம்பரின் புலமை நலத்தையும் கவித்திறமையையும், விளக்குவனவாக உள்ளமையால் அவற்றைத் தொகுத்துக் கூறுவோம்.

### இளமைப் பருவம்

கம்பர் சோழ வளநாட்டில் கி. பி. 12-ஆம் நூற்றுண்டில் திருவழுந்தூரில் உவச்சர் குலத்தில் ஆதித்தன் என்பவர்க்கு மகனாய்த் தோன்றினார். பிறந்த சில ஆண்டுகளுக்குள் இவர் தம் பெற்றோர்கள் இருவரும் ஒருவர் பின் ஒருவராய் மறைந்தனர். அதனால் கம்பர் மிக்க இளம் பருவத்திலேயே ஆதரவற்றவரானார். விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்பதற்கு ஏற்பப் பிற்காலத்தில் பெருங் கவிஞராக விளங்குவதற்குரிய பண்புகள் யாவும் அவரிடம் இளமையிலேயே அமைந்து விளங்கின. எனினும் அவர் தம் இயற்கை அறிவை நூலறிவால் வளர்த்துக்கொள்ள வாய்ப்பின்றி வருந்தினார். 'கொடிது கொடிது இளமையில் வறுமை' என்ற மெய்ம்மொழி அவர் வாழ்வில் உண்மையானது.

### சடையப்பரின் ஆதரவும் கல்வி நலமும்

வறுமை வாய்ப்பட்டு வருந்தி நின்ற கம்பர், வெண்ணெய் நல்லூர் வள்ளல் சடையப்பரின் அருங் குணங்களைக் கேள்வியுற்று அவரை அடைக்கலமாக அடைந்தார். சடையப்பரும் கம்பருடைய ஒளி வீசும் முகத்தைக் கண்டு அவர்பால் அன்பு கொண்டு தம் மைந்தரைப்போலப் புரந்து வந்தார். அவருடைய கருணைப் பெருக்கால் கம்பர் தென் மொழியும் வட மொழியும் கற்றுத் தேர்ந்தார். கலைமகளின் பேரருள் அவருக்கு வாய்த்தமையால் கம்பர் விரைவிலேயே கல்வியில் கரை கண்டவரானார்; கவிபாடும் ஆற்றல் கைவரப்பெற்ற கவிஞரானார். 'கல்வியிற் பெரியவர் கம்பர்,' என நாடு அவரைப் புகழத் தொடங்கியது.

## இல்லற வாழ்வு

கம்பருடைய புலமையையும் கவித்திறமையையும் அறிந்த சடையப்பர் பெரிதும் மகிழ்ந்தார். அவரைத் தமக்குச் சமமாக மதித்துப்போற்றி வந்ததோடு அவருடைய அறிவாற்றலுக்கு ஏற்ற நங்கையார் ஒருவரைத் தேர்ந்து மணம் முடித்து வைத்தார். கம்பரும் தம் அன்பு மனைவியாருடன் இல்லறத்தை நல்லறமாய் ஆற்றி இனிது வாழ்ந்து வந்தார்.

## ஏரெழுபது இயற்றல்

தம் வாழ்வில் விளக்கேற்றி வைத்த வள்ளலின் பேருதவிக்கு நன்றி செலுத்த வேண்டும் என்று விரும்பினார் கம்பர். அவருடைய அரிய பண்பு நலங்களைப் பாராட்டி ஒரு நூல் இயற்ற வேண்டும் என்பது அவர் ஆவல்; 'பணியுமாம் என்றும் பெருமை' என்பதற்கு ஏற்பச் சடையப்பர் அதற்கு இணங்கவில்லை. கம்பர் பெரிதும் வற்புறுத்தி வேண்டவே, சடையப்பர் அவருடைய ஆர்வத்தைக் கண்டு "அங்ஙனமாயின் நான் பிறந்த வேளாளர்குலப்பெருமையைப் புகழ்ந்து பாடுங்கள்," என்று கூறக் கம்பர் பெருமகிழ்ச்சி அடைந்தார். வள்ளலின் விருப்பப்படியே 'ஏர் எழுபது' என்னும் அரிய நூலை இயற்றினார். அது உழவுத் தொழிலின் மாண்பினையும், அதனை மேற்கொண்டு உலகத்தைக் காத்து வரும் வேளாளர் குடியின் பெருமையையும் அழகாக விளக்கிக் கூறும் நூலாகும்.

## அரசவைக் கவிஞர்

கம்பருடைய கவித் திறமை சோழ மன்னன் குலோத்துங்கன் செவிக்கு எட்டியது. அவன் தமிழ்ப்

புலவர்களைப் போற்றுவதில் தணியாத ஆவல் உடையவன். ஒட்டக்கூத்தர் போன்ற பெரும் புலவர்கள் அவன் அவையிலிருந்து தமிழின்பம் ஊட்டிவந்தனர். கம்பருடைய திறமையை அறிந்த அம் மன்னன் தக்கவர் மூலம் அவரைத் தன் அவைக்கு அழைத்தான். அவரோடு அளவளாவி அவருடைய அறிவாற்றலை உணர்ந்து அளவில்லாத ஆனந்தம் கொண்டான்; அவரைத் தன் அரசவைப் புலவராய் இருந்து சிறப்பிக்குமாறு வேண்டிக் கொண்டான். கம்பர் அவன் வேண்டுகோளுக்கு இணங்கித் தம் கவித் திறத்தால் மன்னனை மகிழ்வித்து வந்தார். தம் நாநலத்தால் நாளடைவில் அவரே அரசவைப் புலவர்கள் அனைவர்க்கும் தலைவராகும் தகுதி பெற்றார்.

காவிரி கரையடங்கப் பாடல்

இவ்வாறு கம்பர் தம் புகழ் பரவ வாழ்ந்துவரும் நாளில் ஒரு சமயம் காவிரியாறு பெருக்கெடுத்துப் பல ஊர்களையும் நெல்லும் கரும்பும் விளையும் செழுமையான நிலங்களையும் நாசம் செய்யத் தொடங்கியது. ஊர் மக்கள் எல்லாரும் தங்கட்கு என்ன நேருமோ என்று அஞ்சி நடுங்கினர். குடிமக்கள் நிலைகண்டு குலோத்துங்கன் செய்வதறியாது கலங்கினன். அப்போது நல்லிசைப் புலவராகிய கம்பர் காவிரிக் கரையிற் சென்று அத் தெய்வத் திருநதியை நோக்கி,

"கன்னி அழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரையழிந்து போனாளென்—றிந்நீர்
உரைகிடக்க லாமோ உலகுடைய தாயே
கரைகடக்க லாகாது காண்,"

என்று பாட, கம்பர் கவிநயத்துக்குக் கட்டுப்பட்டது போலக் காவிரிப் பெருக்கு உடனே அடங்கியது. அது கண்டு அனைவரும் கம்பருடைய கவிப் பெருமையைப் போற்றிக் களி கூர்ந்தனர். மலை போல வந்த துன்பம் பனிபோல நீங்கியது அறிந்து மகிழ்ந்த குலோத்துங்கன் நாடு காத்த அந் நல்லவருக்கு வளநாடு ஒன்றையே பரிசாக வழங்கினான். அந் நாடு அன்று முதல் கம்பர் பெயரால் 'கம்ப நாடு' என்ற பெயர் பெற்றது.

## இராமாயணம் இயற்றத் தொடங்கல்

தம் கவித் திறமையால் தமிழகம் முழுதும் போற்ற வாழ்ந்த கம்பர் நிலையானதொரு காவியம் இயற்ற வேண்டும் என்று பெரிதும் விரும்பினார். வடமொழியில் வான்மீகி இயற்றிய இராமாயணத்தைத் தமிழில் பாடித் தமிழன்னைக்குக் காணிக்கையாகத் தர வேண்டும் என்ற ஆவல் கம்பர் மனத்தில் தோன்றி வளர்ந்து வந்தது. அவருடைய எண்ணப் பயிரை எருவிட்டு வளர்த்தது போல மன்னன் குலோத்துங்கனும் அக்காவியத்தை இயற்றுமாறு வேண்டிக் கொண்டான். அவனுடைய வேண்டுகோளை ஏற்றுக் கம்பர் இராமாயணம் பாடி வந்தார்.

## சடையப்பரை வைக்க வேண்டிய இடம்

அவர் அங்ஙனம் இராமாயணம் இயற்றிக் கொண்டிருந்த நாளில் அவர் இல்லத்தில் ஒரு மங்கல நிகழ்ச்சி நடைபெற்றது. அதற்கு அரசன் முதல் அனைவரும் வந்திருந்தனர். வீட்டில் இடம் இல்லாதபடி பெருங்கூட்டம் கூடியிருந்தது. சற்றுக் காலம் தாழ்த்து வந்த சடையப்பர் உள்ளே செல்ல இயலாமல் இடைகழியிலேயே நின்றார். அது கண்டு

அரசன் முதலியோர் அவரை உள்ளே வருமாறு அழைத்தனர். அப்போது கம்பர், "அவரை வைக்க வேண்டிய இடத்தை நானறிவேன். அங்கு அவரை வைத்துள்ளேன்; அங்கேயே அமரட்டும்," என்று வேடிக்கையாகக் கூறினர். அப்போது அவர் கூறியதன் பொருள் ஒருவருக்கும் விளங்கவில்லை. வேடிக்கைக்காகக் கூறுகிறார் என்றே எண்ணி அனைவரும் நகைத்தனர். நிகழ்ச்சி முடிந்ததும் அனைவரும் கம்பரிடம் விடைபெற்றுச் சென்றனர்.

## திருவரங்கத்தில் அரங்கேற்றம்

அதற்குப் பிறகு கம்பர் இராமாயணத்தை ஊக்கமுடன் பாடி முடித்தார். இராமபிரானின் பெருமை கூறும் அக்காவியத்தைத் திருவரங்கநாதர் முன் அரங்கேற்ற விரும்பினர் கம்பர். உடனே திருவரங்கம் சென்று தம் விருப்பத்தை அங்குள்ள வைணவப் பெரியார்களிடம் கூறினர். அவர்கள் அதற்கு மகிழ்வுடன் இயைந்து, வேண்டிய ஏற்பாடுகள் செய்தனர். நாதமுனிகள் என்னும் வைணவப்பேரறிஞர் தலைமை வகித்தார். தமிழகத்தின் பல பாகங்களிலிருந்தும் பெரும்புலவர்களும் பக்தர்களும், பெருஞ்செல்வர்களும் வந்து குழுமி இருந்தனர். கம்பர் அரங்கநாதப் பெருமானை வணங்கித் தம் சொற்பொழிவைத் தொடங்கினர். இராமாயணக் கவிதைகளை இசையுடன் பாடி அவற்றின் சொல்லழகு பொருளழகுகளையும், கற்பனை நயங்களையும், உவமை முதலிய அணிநலங்களையும் விளக்கி அழகாகச் சொற்பொழிவு நிகழ்த்தினர். அனைவரும் கம்பர் வழங்கிய தமிழமுதத்தை மாந்திக் களித்தனர். இவ்வாறு பல நாட்கள் கேட்டவர் அனைவரும் வியந்து போற்றுமாறு சொன்

மாரி பொழிந்து கம்பர் தம் காவியத்தை அரங்கேற்றி முடித்தார்.

### கவிச் சக்கரவர்த்தி

அவையில் கூடியிருந்து கேட்ட புலவர்களும் மற்றவர்களும் கம்பருடைய கவித்திறமையைப் பாராட்டிப் பெரிதும் கொண்டாடினர்; அவர் இயற்றிய காவியத்தைப் பலவாறு போற்றிப் புகழ்ந்தனர். தலைமை வகித்த பெரியார் கூடியிருந்த அத்தனை பேரின் சார்பிலும் கம்பருக்குக் 'கவிச் சக்கரவர்த்தி' என்னும் சிறந்த பட்டத்தை வழங்கிப் பாராட்டினார். வைணவப் பெரியார்கள் அரங்கநாதன் திருமேனியில் சாத்தப்பட்ட மலர் மாலையைக் கொணர்ந்து கம்பருக்கு அணிவித்துப் 'பல்லாண்டு வாழ்க' என்று வாழ்த்தினர்.

### தெய்வ நூலில் சடையப்பர் பெருமை

அப்போது தலைமை வகித்த அப்பெரியார், "கவிச் சக்கரவர்த்தி அவர்களே! ஒரு வேண்டுகோள். தாங்கள் இயற்றிய இப்பெருங்காவியத்தில் ஒரு சிறு குறை மட்டும் என் நெஞ்சை உறுத்துகிறது. தெய்வ மணம் வீசும் இந்நூலில் மனிதரைப் பற்றிய புகழ் சற்று அதிகமாக உள்ளது. நன்றி மறவாமல் சடையப்பரைத் தங்கள் காவியத்தில் புகழ்ந்து பாடியது பொருத்தமே. தாங்கள் பாடிய பத்தாயிரம் பாடல்களில் நூற்றுக்கு ஒரு பாடலில் அவர் புகழ் அமையுமாறு பாடியுள்ளீர்கள். ஆயிரத்துக்கு ஒரு பாடலில் அவர் புகழை அமைத்துக் கூறினால் இக்காவியத்தின் பெருமை இன்னும் சிறக்கும் என்பது என் எண்ணம்," என்று அன்புடன் கூறினார். வைணவப்

பெரியார்கள் பலரும் அவர் கூறியதை ஏற்றுக்கொண்டனர்.

**ஆயிரத்தில் ஒருவர்**

அவர் கூறிய உரையைக் கேட்ட கம்பர், "பெரியோர்களே! நீங்கள் கருதுவதே சரியாகும். சடையப்பரின் பெருமையை நான் உள்ளபடியே உணரத் தவறிவிட்டேன். அதனாலேயே அவரை நூற்றில் ஒருவராகக் கருதிப் பாடினேன். நீங்களோ அவரை ஆயிரத்தில் ஒருவராகக் கருதுகிறீர்கள். நூற்றுவரில் ஒருவராக அவரை மதிப்பதினும் ஆயிரத்தில் ஒருவராக மதிப்பதன்றோ அவர் பெருமைக்கு ஏற்றதாகும். நீங்கள் கருதியவாறே அவர் பெருமையை ஆயிரத்துக்கு ஒரு பாடலாக அமைத்து விடுகிறேன்," என்று சாதுரியமாக மொழிந்தார். கம்பர் கூறிய மொழியைக் கேட்டவர் அனைவரும் அவருடைய நுண்ணறிவின் திறத்தை எண்ணி வியந்தனர்.

**நன்றி மறவா நல்லியல்பு**

பின்னர்க் கம்பர் சில நாட்கள் திருவரங்கத்தில் தங்கிச் சோழன் அவைக்களத்தை அடைந்தார். அதற்கு முன்பே கம்பருடைய புகழ் அரசனுக்கு எட்டிவிட்டது. அவன் கம்பரை வரவேற்று மார் புறத் தழுவி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். சடையப்பர் கொண்ட மகிழ்ச்சியை அளவிட முடியுமோ? அரசனுடைய விருப்பப்படி கம்பர் தம் இராமாயணத்தைச் சோழன் அவையிலும் மற்றொரு முறை அரங்கேற்றி அனைவரையும் ஆனந்த வெள்ளத்தில் மூழ்குவித்தார். அவருடைய அரிய காவியத்தைக் கேட்டவர் அனைவரும் அவரைப் பலவாறு போற்றிப் புகழ்ந்தனர். அவர், 'சடையப்பரை வைக்க

வேண்டிய இடத்தில் வைத்துள்ளேன்,' என்று அன்றொரு நாள் கூறியதன் கருத்தை உணர்ந்து மகிழ்ந்தனர்; சடையப்பரைத் தம் காவியத்தில் புகழ்ந்து பாடியதன் மூலம் வையம் உள்ளளவும் வாழச்செய்த அவருடைய நன்றி மறவா நல்லியல்பைப் பெரிதும் பாராட்டினர்.

### கம்பர் போன வழி கண்டு கழித்தது

இராம கதையைக் கேட்டு மன்னன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவன் தன் மகிழ்ச்சிக்கு அறிகுறியாக அவருக்குப் பல்லக்கு, சின்னம், காளம் முதலிய விருதுகளையும் பல பெரும் பரிசுகளையும் வழங்கிச் சிறப்பித்தான். மேலும் கம்பர் செல்லும் வழியில் உள்ள சாலை, குளம், சோலை, வயல் முதலிய எல்லாவற்றையும் அவர் தம் உரிமையுடன் அநுபவித்துக்கொள்ளலாம் என்றும், அதனால் ஏற்படும் பொருட் குறைவு அரசாங்கத்தால் ஈடு செய்து கொள்ளப்படும் என்றும் நாடு முழுதும் அறிவித்தான். அப்படியே கம்பர் வாழ்ந்த காலம் முழுவதும் 'கம்பர் போன வழி கண்டு கழித்தது இவ்வளவு' என்று குடி மக்களுக்குத் தள்ளிக் கொடுக்கப்பட்டு வந்தது.

### புவியரசனின் முன் கவியரசரின் பெருமிதம்

இங்ஙனம் கம்பரிடத்தில் எல்லையிலாப் பேரன்பு பூண்டு வாழ்ந்த குலோத்துங்கனே ஒருசமயம் அகந்தையால் அவரிடம் அலட்சியமாக நடந்துகொண்டான். ஒரு நாள் கம்பருடன் சோலையில் அவன் மகிழ்ச்சியுடன் உரையாடிக் கொண்டிருக்கையில் 'இந்நாடு முழுதும் எனக்கு அடிமையன்றோ?' என்று ஆணவமாகக் கூறினன். அவனுடைய அந்த

ஆணவத்தை அடக்கக் கருதிய கம்பர், "ஆம் அதில் என்ன ஐயம்! இந்த நாடு உமக்கு அடக்க மானுலும் நீர் எமக்கடக்கம்' என்று புன்னகையுடன் கூறினுர். அது கேட்ட குலோத்துங்கன் கடுஞ்சினம் கொண்டான். கம்பர் தன்னை அவமதிப்பதாக எண்ணி ஆத்திரத்தால் அறிவிழந்து கம்பரை அக்கணமே தன் நாட்டை விட்டகலுமாறு கட்டளையிட்டான். வேந்தனுடைய அந்த அகந்தையைக் கண்ட கம்பர் சிறிதும் அஞ்சாமல் அவனை நோக்கி,

"மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ
உன்னையறிந் தோதமிழை ஓதினேன்—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு?"

என்று பெருமிதத்துடன் கூறி அவ்விடத்தைவிட்டு அகன்ருர்.

**கற்ருேர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு**

கம்பர் மன்னன் கட்டளைப்படி சோழ நாட்டை விட்டுப் புறப்பட்டு வழியில் எண்ணற்ற துன்பங்களை அடைந்து ஆந்திர நாட்டைச் சேர்ந்த ஒரங்கல் நகரத்தை அடைந்தார். அங்குப் பிரதாப ருத்திரன் என்னும் அரசன் அரசாண்டு வந்தான். அவன் கல்வியருமை அறிந்தவன்; புலவர்களை அன்புடன் போற்றுபவன். கம்பருடைய கவிப் பெருமையை அவன் கேள்வியுற்றிருந்தமையால் தம் அவையை அடைந்த கம்பரைச் சிறப்பாக வரவேற்று உபசரித்தான்; அவர் வாய்மொழி மூலமாகவே இராம காதையை எடுத்துக் கூறக் கேட்டு இன்புற்ருன். கம்பர் தமக்குரிய பெருமிதத்தோடு அவன் அவைக்கண் சிறப்புற வாழ்ந்து வந்தார்.

**மீண்டும் சோழ நாடடைதல்**

கம்பரைப் பிரிந்த குலோத்துங்கன் பின்னர் மிகவும் வருந்தினன். அவன் அரசவை கம்பரில்லாமையால் மதியில்லாத வானம் போலப் பொலிவிழந்தது. அதனல் அவரைத் தேடி அழைத்து வருமாறு ஆட்களைப் போக்கினன். கம்பரைத் தேடிச் சென்ற பணியாளர்கள் ஓரங்கல் நாட்டை யடைந்து கம்பரைக் கண்டு வணங்கி மன்னன் வேண்டுகோளைக் கூறினர். சான்றோர் சினம் நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமன்றோ? கம்பரும் சோழனைக் காண ஆவல் கொண்டு பிரதாபருத்திரனிடம் பிரியா விடைபெற்றுச் சோழ நாடு வந்து சேர்ந்தார். குலோத்துங்கன் அவரை அன்புடன் வரவேற்றுத் தழுவிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான்; தன் குற்றத்தை மன்னிக்குமாறு வேண்டினன். கம்பர் மன்னனைத் தேற்றி அவனுடன் முன்போல் அளவளாவி இன்புற்று வாழ்ந்து வந்தார்.

**விதி செய்த சதி**

கம்பரும் குலோத்துங்கனும் இவ்வாறு வாழ்ந்து வரும் நாளில் விதி மற்றொரு வகையில் சதி செய்தது. கம்பருடைய மகன் அம்பிகாபதி 'புலிக்குப் பிறந்தது பூனையாகுமா' என்பது போலப் பேரறிவும் கவித்திறமையும் உடையவனுக விளங்கினன். மன்னன் மகள் அமராவதி அவன் அழகிலும் அறிவிலும் உள்ளத்தைப் பறிகொடுத்தாள். இருவரிடையில் காதல் வளர்ந்தது. இச் செய்தி மன்னன் செவிப்பட்டதும் அவன் அடங்காச் சினம் கொண்டான்; அறிஞர்கள் பலர் அவனுக்குத் தேறுதல் கூறவும் அவன் அடங்காதவனுனன். அவன் ஒரு நிபந்தனை விதித்தான். அம்

பிகாபதி பேரின்பப் பொருளாக நூறு பாடல்கள் பாடி ஞல் அவனை மன்னிப்பதாகவும், தவறிஞல் மரண தண்டனை விதிக்கப்படும் என்றும் கூறினுன். அம்பி காபதி அவ்வாறே பாடி வரும்போது மன்னன் மகள் மறைவிடத் தமர்ந்து மிக்க கவலையுடன் அவற்றை கணக்கிட்டு வந்தாள். கடவுள் வாழ்த்துச் செய்யுளை யும் ஒரு பாடலாகக் கருதித் தொண்ணூற்றென்பதா வது பாடல் முடிந்தவுடன் நூறு பாடல் முடிந்ததாக எண்ணி அவள் மகிழ்ச்சியோடு அவனைப் பார்க்க, அம்பிகாபதி நிலையழிந்து நூருவது பாடலைச் சிற்றின் பம் தோயப் பாடிவிட்டான். அதனுல் நிபந்தனைப்படி மன்னன் அவனுக்கு மரண தண்டனை விதித்தான். கம்பர் எவ்வளவு வேண்டியும் மன்னன் மனம் இரங்கவில்லை. அதனுல் கம்பர் மனமுடைந்தார்.

### கம்பர் மறைவு

முதுமையில் ஒரே மகனை இழந்த கம்பர் நெஞ்சம் நெக்குருகி, உடல் தளர்ந்து, உள்ளம் ஓய்ந்து, நோய் வாய்ப்பட்டு வருந்திஞர். நாளடைவில் அவர் உடல் நலம் கேடுற்று இறக்கும் நிலையை எய்திஞர். அப் போதும் நன்றி மறவாத அவர் நெஞ்சம் சடையப் பரை எண்ணி உருகியது.

"ஆன்பாலும் தேனும் அரம்பைமுதல் முக்கனியும்
தேன்பாய உண்டு தெவிட்டுமனம்—தீம்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா! கம்பன்
இறக்கும்போ தேனும் இனி,"

என்னும் அரிய பாடல் அவர் வாயினின்றும் பிறந் தது. அவர் நல்லுயிர் உடற் கூட்டிலிருந்தும் பிரிந் தது. தமிழகம் துயர்க் கடலுள் ஆழ்ந்தது.

புகழுருவம்

கம்பர் மறைந்தாலும் அவர் புகழுடலாகப் பொலி யும் இராமாயணத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார். அக்காவியத்தைக் கற்பதன் மூலம் அவருடைய கவி யுள்ளத்தோடு உறவாடிக் களிக்கலாம்; அக்காலத் தமிழ் மக்கள் பெற்ற பேரின்பத்தை நாமும் பெற்று இன்புறலாம். கம்ப ராமாயணத்தின் மூலம் அவர் கவியமுதைப் பருகிக் களிப்பதோடு அவருடைய கம்பீரமான உருவைக் கண்குளிரக்கண்டு மகிழவும் உலகத் தமிழ் மாநாடு வழி செய்ததை-சிலையமைத்து வழிபாடு செய்ததை-எண்ணி எண்ணித் தமிழுலகம் இன்ப வெள்ளத்தில் திளைக்கும் என்பது உறுதி யன்றோ?

# 5. வீரமாமுனிவர்

உலகில் சிறந்த நாகரிகம் பெற்ற மொழிகளில் நம் தாய்மொழியாகிய தமிழ் மொழியும் ஒன்றாகும். தமிழ் இனிமையான மொழி; இலக்கண இலக்கிய வளம் நிறைந்த மொழி. தமிழின் இனிமைக்கும் வளத்துக்கும் அதனுடைய நூல்களே காரணமாகும். தமிழ்மொழியில் உள்ள தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களும், சங்க இலக்கியங்களும், உலகப் பொதுமறையாகிய திருக்குறளும், நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரமும், திருத்தக்க சிந்தாமணியும், கம்பன் கவியமுதமும் அம் மொழிக்கு உலகம் போற்றும் பெருமையை அளித்துள்ளன. தமிழின் இனிமையும் இலக்கியச் சிறப்பும் தமிழர்களை மட்டுமன்றித் தமிழ் தெரியாத அயல் நாட்டினரையும் கவர்ந்துள்ளன. அயல் நாட்டறிஞர் பலர் தமிழ்கற்றுத் தமிழில் பெரும் புலவர்களாய் விளங்கியதோடு, தமிழ் வளர்ச்சிக்கு நிலையான பல தொண்டுகளும் புரிந்துள்ளனர். அவர்களுள் தலை சிறந்தவர் வீரமாமுனிவர்.

## ஊரும் பேரும்

வீரமாமுனிவர் இத்தாலி நாட்டில் மாந்துவா மாவட்டத்தைச் சார்ந்த காஸ்திக்கிலியோன் என்னும் சிற்றூரில் கி. பி. 1680 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் எட்டாம் நாள் பிறந்தார். இவருடைய தந்தையார் கொண்டல் போபெஸ்கி என்பவர். தாயார் எலிசபெத் என்பவராவார். பெற்றோர்கள் இவருக்கு,

இட்டபெயர் கான்ஸ்டான்ஷியுஸ் ஜோசப் பெஸ்கி என்பதாகும். இவர் கத்தோலிக்க கிறித்தவ மதத்தைச் சார்ந்தவர்.

## இளமையும் கல்வியும்

பெஸ்கி இளமையிலேயே கூர்மையான அறிவும் ஆற்றலும் உடையவராக விளங்கினர்; அன்பு, அடக்கம் முதலிய நற்பண்புகளுக்கு உறைவிடமாகத் திகழ்ந்தார்; ஒழுக்கமே விழுப்பந் தருவது என உணர்ந்து அதனை உயிராகப் போற்றி வந்தார். மன்னுயிர்களின் பாவத்தைப் போக்கத் தன்னுருயிரைச் சிலுவையில் தந்த அருளின் திருவுருவாய இயேசுநாதரின் தியாகச் செயல்கள் இளமையிலேயே பெஸ்கியாரின் உள்ளத்தைக் கவர்ந்தன. ஆதலால் அவர் கிறித்துவின் உயர்ந்த கொள்கைகளை உலகம் முழுவதும் பரப்பும் தொண்டில் ஈடுபடும் ஆர்வமுடையவராய் இருந்தார். அதனல் பெஸ்கியார் 1698 ஆம் ஆண்டு தம் பள்ளிப் படிப்பை முடித்தவுடன் ஏசு சபையில் சேர்ந்தார்.

## சமயத் தொண்டர்

அங்குப் பெஸ்கியார் சமயக் கல்வியைக் குறைவறக் கற்றுத் தேர்ச்சி பெற்றதோடு இத்தாலியம், இலத்தீன், கிரேக்கம், எபிரேயம் முதலிய பல மொழிகளையும் கற்று அவற்றிற் சிறந்த புலமை பெற்றார். கற்க வேண்டிய ஞான நூல்களை எல்லாம் கற்று கற்ற வழியில் ஒழுகி வந்தார். அவருடைய அறிவையும், ஒழுக்கத்தையும், சமய உண்மைகளைப் பிறர் மனங்கொள எடுத்துரைக்கும் ஆற்றலையும் உணர்ந்து 1707 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் அவருக்குக் குருப் பட்டம் வழங்கப்பட்டது. அவர்

தமிழ் நாட்டில் கிறித்தவ மதத்தைப் பரப்பும் துறையில் பணியாற்றுமாறு அனுப்பி வைக்கப்பட்டார்.

## தமிழ் கற்கத் தொடங்கல்

பெஸ்கி யடிகளார் கி.பி 1710ஆம் ஆண்டு தமிழ் நாட்டுக்குப் புறப்பட்டார். இவர் தமிழ் நாட்டை அடைந்து திருநெல்வேலி மாவட்டத்தில் சமயப் பணி புரியத் தொடங்கினுர். தமிழறியாத அவர் தமிழ் மக்களோடு நெருங்கிப் பழக இயலாமல் பெரிதும் துன்புற்ருர். தம் சமயப் பணி வெற்றி பெற வேண்டுமாஞல் தம் சமய உண்மைகளைத் தமிழ் மொழியில் எடுத்துக் கூறிஞல்தான் பயன் விளையும் என உணர்ந்த பெஸ்கியார் அதற்காகத் தமிழ் கற்கத் தொடங்கினுர். அவர் இளமையில் தம் தாய்மொழியுடன் வேறு பல மொழிகளையும் கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்தமையால் தமிழைக் கற்பது அவருக்கு மிக எளிதாகவே இருந்தது. விரைவிலேயே அவர் தமிழைப் பிழையின்றிப் பேசவும் எழுதவும் கற்றுக் கொண்டார்.

## தமிழ்ப் புலமையும் கவித் திறமையும்

தமிழ்மொழியை ஊன்றிக் கற்கத் தொடங்கியது முதல் தமிழின் இனிமை அவருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அதஞல் தமிழில் பிறருடன் பேசும் அளவுக்குத் தமிழ் கற்கப் புகுந்த அவர் அம்மொழியில் உள்ள சிறந்த இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் புலமை பெற்றுத் தமிழின் சுவையைத் துய்க்க ஆவல் கொண்டார்; அக்காலத்தில் தமிழில் பெரும் புலவராய் விளங்கிய சுப்பிரதீபக் கவிராயரின கல்விச் சிறப்பை அறிந்து அவரை அடுத்துத் தமிழ் பயிலத் தொடங்கினுர். கவிராயர்

தமிழ் இலக்கண இலக்கியங்களை அவருக்கு முறை யாகக் கற்பித்தார். கோடைக் காலத்தில் நீர் வேட்கை கொண்ட ஒருவன் குளிர்ந்த நீரைக் கண்டால் எவ் வளவு ஆர்வமுடன் பருகுவானோ அவ்வளவு ஆர்வ முடன் தமிழமுதத்தைப் பருகிய பெஸ்கியார், ஐந்தே ஆண்டுகளில் அரிய தமிழ்ப் புலமையும் கவிபாடும் திறமையும் வாய்க்கப் பெற்றார். அவருடைய நுண் மாண் நுழை புலத்தையும் பெரு முயற்சியையும் என் னென்பது!

## தமிழ் முனிவர்

அயல் நாட்டவரான அவர் தமிழ் கற்றவுடன் தமிழ் நாட்டவரானார்; தமிழ்நாட்டவரின் பழக்க வழக் கங்களை மேற்கொண்டார்; தமிழ்நாட்டுத் துறவி களைப்போலவே காவியாடை அணிந்தார்; கையில் யோக தண்டம் கொண்டார்; காலில் பாதக் குறடு தரித்தார்; காதுகளில் குண்டலம் அணிந்தார்; எங்குச் சென்றாலும் புலித்தோலை விரித்து அதன்மேல் அம ரும் பழக்கத்தை மேற்கொண்டார். அவர் சிவிகை ஊர்ந்தே எங்கும் செல்வார். இங்ஙனம் நடை உடை களை எல்லாம் தமிழ்ப் பண்பாட்டிற்கேற்ப மாற்றிக் கொண்டதோடு பெஸ்கியார், தம் உணவையும் மாற்றி யமைத்துக் கொண்டார்; புலால் உணவை அறவே ஒழித்தார்; புலால் ஒழிந்த நல்லுணவை ஒரு வேளையே உண்ணும் பழக்கத்தை மேற்கொண்டார். கிறித்தவ சமயத்தவராகிய அவர் தைரியமாகத் தமிழ் நாட்டுப் பழக்க வழக்கங்களுக்கு ஏற்பத் தம்மை மாற்றிக் கொண்ட துணிவைப் பாராட்டி மக்கள் அவரைத் தைரியநாத சுவாமி எனப் போற்ற லாயினர். அப்பெயரே வீரமாமுனிவர் என்னும்

தூய தமிழ்ப் பெயராய்—அவர் புகழை விளக்கும் நிலைத்த நற்பெயராய்—வழங்கலாயிற்று.

**சமயத் தொண்டும் தமிழ்த் தொண்டும்**

வீரமாமுனிவர் சமயத்தொண்டு புரிந்ததுடன் தமிழராகிய நாம் என்றும் நன்றி பாராட்டத்தக்க வகையில் அரும்பெருந் தமிழ்த்தொண்டுகளும் புரிந்துள்ளார். அவர் முயற்சியால் திருநெல்வேலி மாவட்டம் தென்னாட்டில் கிறித்தவ சமயத்திற்கே நிலைக்களமாக விளங்கியது. அவர் வாழ்ந்து தொண்டுசெய்த வடக்கன் குளம், காமநாயகன் பட்டி, தூத்துக்குடி, மணப்பாடு என்னும் ஊர்கள் இன்றும் கிறித்தவ சமயத்தின் ஊற்றிடங்களாய்ப் பொலிகின்றன.

**திருக்காவலூர்க் கலம்பகம்**

வீரமாமுனிவர் கொள்ளிடக் கரையில் அமைந்த ஏலாக்குறிச்சியில் சமயப் பணியாற்றியபோது மரியன்னைக்கு ஒரு கோயில் நிறுவினார்; அண்டினவர்க்கெல்லாம் அடைக்கலம் தந்து ஆளும் அருளுருவாய அவ்வன்னைக்கு அடைக்கல மாதா என்று பெயர் வழங்கினார்; அவ்வன்னையின் காவலில் அமைந்த அப்பகுதியைத் திருக்காவலூர் என்று வழங்கினார். திருக்காவலூர் அடைக்கல மாதாவிடம் அடிகளார் அளவிலா அன்புடையவராய் வாழ்ந்தார். அத்தாயின் கருணையைப் போற்றி அடைக்கல மாலை, அன்னை அழுங்கல் அந்தாதி, திருக்காவலூர்க் கலம்பகம் என்னும் பக்திச் சுவை நிறைந்த நூல்களைப் பாடிப் பரவினார்.

**தேம்பாவணி**

வீரமாமுனிவர் தமிழில் இயற்றிய செய்யுள் நூல்கள் பலவாகும். அவற்றுள் எல்லாம் சிறந்ததும்

அடிகளாரின் புகழுருவாய், அவருடைய தமிழ்ப் புலமைக்கும் கவித் திறமைக்கும் எடுத்துக்காட்டாய்த் திகழ்வதும் 'தேம்பாவணி' என்னும் காப்பியமே ஆகும். தேம்பாவணி என்பதற்கு வாடாத மாலை என்பது பொருள். பொருளுக்கு ஏற்ப அந்நூல் தமிழ்த்தாயின் திருமார்பில் வாடாத மணமாலையாய்ப் பொலியும் மாண்புடையதாகவே விளங்குகிறது. அது ஏசுநாதரை வளர்த்த தந்தையாகிய சூசையப்பரின் வரலாற்றை விரித்துரைக்கும் காவியமாகும். அந்நூலில் சிந்தாமணியின் செய்யுள் நடையும், கம்பரின் கவிச் சுவையும், கற்பனை நலமும் கனிந்திலங்குகின்றன. இடையிடையே திருக்குறள் என்னும் தெய்வத் திருமறையின் கருத்து வளம் கவின் செய்கின்றது. இந்நூல் கி. பி. 1726இல் இயற்றப்பட்டது.

### பரமார்த்த குரு கதை

பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டில் எக்கருத்தையும் செய்யுள் வடிவிலேயே எழுதும் வழக்கம் இருந்தது. செய்யுளில் அமைந்த அந்நூல்களைக் கற்றவரே படித்து இன்புற முடியும். கற்றவரேயன்றி மற்றவரும் தமிழின் சுவையை உணர்ந்து இன்புற வேண்டுமானல் தமிழில் உரைநடை நூல்கள் தோன்றுதல் வேண்டும் என்று உணர்ந்தார் வீரமாமுனிவர். அதனல் அவர் இனிய எளிய தமிழ் உரைநடையில் 'பரமார்த்த குரு கதை' என்னும் நூலை எழுதி வெளியிட்டார். அது நகைச் சுவை மலிந்த நூலாதலால் அதனைப் பாமரரும் விரும்பிப் படித்தனர்; நகைச் சுவையோடு தமிழ்ச் சுவையையும் பருகி இன்புற்றனர்.

**தமிழ் உரை நடையின் தந்தை**

அந்நூல் தமிழ் நாட்டில் நல்ல வரவேற்பைப் பெற்றமை யறிந்து வீரமாமுனிவர் வேறு பல நூல்களையும் உரைநடையில் எழுதி வெளியிட்டார். வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம், வாமன் கதை போன்ற கிறித்தவ சமய சம்பந்தமான பல உரைநடை நூல்களையும் அவர் இயற்றியுள்ளார். அவர் முறையைப் பின்பற்றிப் பின்னர்த் தமிழில் உரைநடை நூல்கள் பல வெளிவரலாயின. இன்று எக்கருத்தையும் அழகிய உரைநடையில் எழுதும் வழக்கம் பரவியுள்ளது. இதற்கு வழிகாட்டியாக விளங்கிய வீரமாமுனிவரைத் 'தமிழ் உரைநடையின் தந்தை' என்று போற்றுதல் பொருந்துமன்றோ?

**தமிழகராதியை வெளியிட்ட பெருமை**

உரைநடையைத் தமிழிற் புகுத்தியதோடு அமையாமல் தமிழில் அகராதியை முதன் முதலாக வெளியிட்ட பெருமையும் வீரமாமுனிவருக்கே உரியதாகும். முற்காலத்தில் தமிழ்ச் சொற்களின் பொருளை உணர்த்தும் சாதனங்கள் நிகண்டுகளே. பிங்கலம், திவாகரம், சூடாமணி முதலிய பல நிகண்டுகள் தமிழ் மொழியில் உள்ளன. அந்நூல்கள் ஒவ்வொரு தமிழ்ச் சொல்லுக்கும் இன்ன பொருள் என்பதைச் செய்யுள் வடிவிலேயே கூறுவனவாம். அவற்றை மனப்பாடம் செய்தவரே தமிழில் புலமை பெற முடியும். மேலும் பாக்களால் அமைந்த அந்நிகண்டுகள் கற்றோர்க்கே யன்றி மற்றோர்க்குப் பயன்படா. ஆதலால் தமிழ் வளர்ச்சிக்கு உதவும் வகையிலும், கற்றோரே யன்றி மற்றோரும் தமிழின் சுவையை உணர்ந்து இன்புறுதற்கு வசதியாகவும் ஆங்கில

முறையை யொட்டிய அகராதி ஒன்று இன்றியமை யாதது என்று கண்டார் வீரமாமுனிவர்.

### சதுர் அகராதி

அவர் அரும்பாடுபட்டுத் தமிழ்ச் சொற்களை எல் லாம் அகர வரிசையில் கோவைப்படுத்தி, அவற்றிற் குப் பொருள் கூறும் அகராதி ஒன்றனைத் தொகுத்து வெளியிட்டார். அவர் வெளியிட்ட அந்த அகராதிக் குச் சதுர் அகராதி என்பது பெயர். அவ்வகராதியே இன்று தமிழ்மொழியில் அமைந்த சிறியனவும் பெரி யனவுமாகிய பற்பல அகராதிகட்கும் அடிப்படையாக அமைந்தது.

### நிறுத்தக் குறிகளும் எழுத்துச் சீர்திருத்தமும்

மற்றும் வீரமாமுனிவர் ஆங்கில முறையை யொட்டித் தமிழில் நிறுத்தக் குறிகளை அமைத்து எழுதும் வழக்கத்தையும் புகுத்தினர். அதனல் உரை நடை நூல்களைப் படிக்கும்போது கேட்பவர் தெளி வாகப் பொருள் உணர்ந்து இன்புற முடிகின்ற தன்றே? தமிழில் சில எழுத்துக்களின் வரிவடிவ அமைப்புக்களை மாற்றியமைத்தார் வீரமாமுனிவர். எ, ஒ என்னும் குற்றெழுத்துக்களை மேலே புள்ளியிட்டு எழுதுவதும், ஏ, ஓ என்னும் நெட் டெழுத்துக்களை எ,ஒ எனப் புள்ளியின்றி எழுதுவதும் முன்பிருந்த வழக்கமாம். அதனல் எழுதுவோர்க்கும் படிப்போர்க்கும் விளைந்த இன்னல்கள் கணக்கில. அவ்வின்னல்களை நீக்க வீரமாமுனிவரே அவற்றின் உருவங்களைத் தற்போதுள்ள முறைப்படி மாற்றி யமைத்தார் என்று கூறுவர்.

### தொன்னூல் விளக்கம்

வீரமாமுனிவர் தமிழ் இலக்கணத்தையும் நன்கு ஆராய்ந்து 'தொன்னூல் விளக்கம்' என்னும் பெயரில் ஓர் இலக்கண நூலும் இயற்றியுள்ளார். அயல் நாட்டவரும் தமிழை எளிதில் கற்பதற்கு அவ்விலக்கண நூல் பேருதவி புரியக்கூடியதாகும். பெரும்பாலும் பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூலைப் போலவே அந்நூல் அமைந்திருந்தாலும் தமிழின் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங்களும் அந்நூலில் அழகாகக் கூறப்பட்டுள்ளன.

### திருக்குறள் மொழிபெயர்ப்பு

இங்ஙனம் தமிழுக்கு நிலையான பல தொண்டுகளைச் செய்ததோடு அமையாமல் வீரமாமுனிவர் தமிழின் பெருமையையும், தமிழ்ப் பண்பாட்டின் உயர்வையும் தரணி முழுதும் உணர்ந்து போற்றக் கூடிய ஒரு பெருஞ்செயலையும் செய்து அழியாப் புகழ் பெற்றுள்ளார். தமிழ்மொழியில் தலைசிறந்து விளங்கும் திருக்குறள் என்னும் அரிய நூலை முதன் முதலில் இலத்தீனில் மொழி பெயர்த்து வெளியிட்டவர் வீரமாமுனிவரேயாவர். அம்மொழி பெயர்ப்பே மேனாட்டார் திருக்குறளின் பெருமையையும் அதன் மூலம் தமிழின் சிறப்பையும் அறிந்துகொள்ளப் பேருதவி புரிந்தது. அதனை யொட்டியே பின்னர் போப்பையர் என்பவர் திருக்குறள் முழுவதையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

### வாதத் திறமை

வீரமாமுனிவர் நாவீறு படைத்த நாவலராகவும் விளங்கிப் புகழ் பெற்றார். தம் சமயக் கருத்துக்களை

மக்கள் உள்ளத்தில் நன்கு பதியுமாறு எடுத்துக் கூறும் திறம் பெற்றிருந்ததுடன் எழுத்து வாதம் செய்வதிலும் வாக்குவாதம் புரிவதிலும் அவர் வல்லவராக விளங்கினர். அவர் காலத்தில் தரங்கம்பாடியில் அமைந்திருந்த தேனிய சங்கத்தார்க்கும் (The Danish Mission) வீரமாமுனிவருக்கும் சமயச் சார்பாகப் பெரியதோர் வாதம் நிகழ்ந்தது. வீரமாமுனிவர் அச்சங்கத்தாரின் கொள்கைகளை மறுத்து 'வேத விளக்கம்' என்னும் அரியதோர் நூல் எழுதி வெளியிட்டார். தேனீய சங்கத்தார் அந்நூலை மறுத்துத் 'திருச்சபை பேதகம்' என்று ஒரு நூல் வெளியிட்டனர். அதற்கு மறுப்பாக வீரமா முனிவர் 'பேதகம் அறுத்தல்' என்னும் மற்ெறாரு நூலை எழுதி வெளியிட்டார். இவ்வாறு வாத நூல்கள் பல இயற்றியமையால் தமிழ் உரைநடை செழித்தது.

**அழியாத நினைவுச் சின்னம்**

இங்ஙனம் அயல்நாட்டில் பிறந்து தமிழ் நாடு வந்து சமயத் தொண்டும் தமிழ்த்தொண்டும் புரிந்து அழியாப் புகழ்பெற்ற வீரமாமுனிவர் 1747ஆம் ஆண்டில் கேரள நாட்டில் உள்ள அம்பலக்காடு என்னும் இடத்தில் பூத உடலை நீத்துப் புகழுடம்பு எய்தினர். அவர் மறைந்தாலும் அவர் இயற்றிய தொண்டுகளைத் தமிழர்கள் என்றும் மறக்கமாட்டார்கள் என்பது உறுதி. அவ்வுறுதியை மெய்ப்பிக்கும் வகையில் உலகத் தமிழ் மாநாட்டில், மறைந்த அத் தமிழ் முனிவரின் உருவச் சிலையை நிறுவிச் சிறப்புச் செய்தது சாலப் பொருத்தமாகும். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் தமிழ்ப் பண்பாட்டுக்கு அவ்வுருவச் சிலை நிலையான சின்னமாகும்.

# 6. போப்பையர்

"நான் இறந்த பிறகு என்னை ஒரு தமிழ் மாண வன் என்று என் கல்லறையில் எழுதிவையுங்கள்; என்னுடன் திருக்குறளையும் திருவாசகத்தையும் வைத்து அடக்கம் செய்யுங்கள்," என்று எழுதி வைத் தார் ஓர் அயல் நாட்டறிஞர் என்றால் தமிழ் அவரு டைய உள்ளத்தில் எவ்வளவு ஆழமாக இடம் பெற் றிருந்தது என்பது விளங்கும். அத்தகைய தமிழ் அன்பர்கள் எந்த நாட்டில் பிறந்தால் என்ன? எங்கு வாழ்ந்தால் என்ன? அவர் தமிழரே என்று கொள்வதில் தடையுண்டோ? அங்ஙனம் போற்றிக் கொண்டாடத்தக்க தலையாய தமிழ்ச் சான்றோராய் விளங்கியவர் பேரறிஞர் போப்பையர் ஆவர்.

## இளமையும் கல்வியும்

வீரமாமுனிவருக்குப் பிறகு தமிழ் நாட்டிற்கு வந்து தமிழ்த் தொண்டாற்றிய அயல் நாட்டறிஞர் களுள் ஜி. யு. போப் குறிப்பிடத்தக்கவராவர். இவர் ஆங்கில நாட்டைச் சார்ந்தவர்; கி. பி. 1820ஆம் ஆண்டு பிறந்தவர். வழி வழி சமயத் தொண்டில் ஆர்வமுடைய குடும்பத்தில் பிறந்தமையால் போப் இளமையிலேயே சமயத் தொண்டில் ஆர்வமுடைய வராக இருந்தார். அதனால் போப் பொதுக்கல்வி யுடன் சமயக் கல்வியும் கற்றுப் பெரும்புலமையும், கடவுட் பற்றும், தூய ஒழுக்கமும் உடையவராய் விளங்கினார்.

## தமிழ்நாட்டில் சமயப் பணி

போப்பையரின் அறிவாற்றல்களை உணர்ந்து தென்னிந்தியாவில் இருந்த வெஸ்லியன் சங்கத்தார் அவரைத் தமிழகத்தில் சமய போதகராகப் பணியாற்ற அழைத்தனர். அவர்களுடைய அழைப்பை ஏற்றுக்கொண்டு போப்பையர் தமிழகம் புறப்பட்டார். அப்போது அவருக்கு வயது பத்தொன்பதேயாகும். அப்போதெல்லாம் விரைந்து செல்லும் நீராவிக் கப்பல் போன்ற வசதிகள் இல்லை. அதனால் அவர் தமிழகம் வந்து சேர எட்டு மாதங்களாயின. போப்பையர் அந்த நீண்ட பொழுதை வீணே கழிக்க விரும்பவில்லை; தமிழகத்தில் பணி செய்வதற்கு வாய்ப்பாகத் தமிழைப் பயிலும் முயற்சியில் ஈடுபட்டார். தமிழுடன் வடமொழியும் பயின்றார். அவர் தமிழ் நாட்டை வந்தடைந்ததும் தாம் தமிழில் எழுதி வைத்திருந்த ஒரு சொற்பொழிவைச் செய்து அனைவரையும் வியப்பிலாழ்த்தினார். தமிழ் நாட்டில் பணி செய்ய வந்துவிட்டால் தமிழில்தான் பேச வேண்டும் என்று கருதிய அவருடைய நல்லுணர்வுக்கு அஃதோர் சான்றாக அமைந்தது. பின்னர் அவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சாயர்புரத்திற்குச் சென்று அங்குத் தம் சமயப் பணியைத் தொடங்கினார்.

## கல்வித் தொண்டு

போப்பையர் சாயர்புரத்தில் சமயத் தொண்டு புரிந்து வந்ததோடு, அப்பகுதியில் வாழும் இளைஞர்களின் நல்லறிவை வளர்க்க ஒரு கல்வி நிலையத்தையும் தொடங்கி நடத்தி வந்தார்; அப்பள்ளியில்

தமிழ், இலத்தீன், கிரீக்கு, ஆங்கிலம், ஈபுரு போன்ற பல மொழிகளும் கணிதம், தருக்கம், தத்துவம் போன்ற பல கலைகளும் கற்பிக்கப் பட்டன. அதனால் அவர் புகழ் எங்கும் பரவியது. எனினும் இளைஞர்கள் மீது அளவு கடந்த சுமையை வலிந்து ஏற்ற முயன்றமையால் நாளடைவில் மாணவர் எண்ணிக்கை குறையலாயிற்று. அதனால் மனமுடைந்த போப்பையர் இடையில் இரண்டாண்டுக் காலம் தம் தாய் நாட்டிற்குச் சென்று வாழ்ந்தார்.

## மீண்டும் தமிழ்நாடு திரும்பல்

இரண்டாண்டுகள் கழிந்தபின் போப்பையர் மீண்டும் தமிழ் நாடு திரும்பினார். அப்போது அவர் நீலகிரி, பெங்களூர், தஞ்சாவூர் முதலிய இடங்களில் சமயத் தொண்டு புரிந்தார். நீலகிரியில் தங்கியிருந்த போது அங்கும் ஒரு பள்ளியைத் தொடங்கிப் பத்தாண்டுக் காலம் திறம்பட நடத்தினார்; நீலகிரியில் வாழும் தோடர்களுடன் நெருங்கிப் பழகி அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் மொழியையும் நன்கு தெரிந்து கொண்டார். அவர்கள் பேசும் மொழியில் எந்த நூல்களும் இல்லை எனினும் போப்பையர் அம்மொழியை ஆய்ந்து அதற்கோர் இலக்கணத்தை எழுதியுள்ளார். போப்பையர் பெங்களூரில் வாழ்ந்தபோது காட்டன் பாதிரியார் ஏற்படுத்திய பள்ளியின் தலைவராய் அமர்ந்து அப்பள்ளியின் வளர்ச்சிக்காக அரும்பாடுபட்டார்.

## தமிழ் இலக்கியப் பயிற்சி

போப்பையர் தஞ்சையில் தங்கியிருந்தபோது தான் அவர் மனம் தமிழ்க் கல்வியில் மிகவும் ஈடு

பட்டது. அதனால் அவர் சிறந்த தமிழாசிரியர்கள் வாயிலாய் தமிழ் இலக்கண இலக்கியங்களை ஐயந் திரிபறக் கற்றுத் தேர்ந்தார். அவர் முறையாகத் தமிழ் கற்று வந்தபோது தமிழ் மொழியில் அமைந்த சிறந்த நீதி நூல்கள் அவர் சிந்தையைக் கவர்ந்தன. சின்னஞ் சிறு குழந்தைகள் முதல் முதியவர் வரை விரும்பிக் கற்கக்கூடிய வகையில் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி, நன்னெறி எனப் படிப்படியே அமைந்த நீதி நூல் வரிசையைக் கண்டு அவர் பெரிதும் வியப் படைந்தார். அவற்றுள்ளும் திருக்குறளும் நாலடி யாரும் அவர் மனத்தை முற்றும் கவர்ந்தன.

## திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தல்

திருக்குறள் தமிழில் உள்ள நூல்களில் தலையா யது; நீதிநூல்களின் முடிமணியாய் ஒளிர்வது. போப் பையர் அந்நூலை விரும்பிப் படித்தபோது அதில் ஏசுநாதரின் இனிய கொள்கை ஒளி வீசுதலைக் கண்டார். தமக்கு இன்னா செய்தவர்க்கும் இனியவே செய்த அருளாளர் ஏசுநாதர்.

> "இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
> என்ன பயத்ததோ சால்பு"
> "இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர் நாண
> நன்னயம் செய்து விடல்"

என்ற குறட்பாக்களில் ஏசுநாதரின் அந்த அருள் உணர்வு பொங்கி வழிவதைக் கண்டு அவர் அகம் மகிழ்ந்தார். அதனால் அவர் திருக்குறளை நுணுகி ஆராயத் தொடங்கினார். பயிலப் பயில அதன் கருத்து வளம் அவர் சிந்தையைக் கொள்ளை கொண்

டது. அச்சீரிய நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க அவர் ஆவல் கொண்டார். அதனால் அவர் அந்நூல் முழுவதையும் நன்கு ஆய்ந்து தேர்ந்து அதனை முழுமையாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டார். போப்பையருக்கு முன்னும் எல்லீசு, துருவர் என்னும் ஆங்கிலப் பாதிரிமார்கள் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தனராயினும் முழுமையாகச் செய்ய வில்லை. போப்பையரின் ஆங்கில மொழிபெயர்ப்பின் மூலமே திருக்குறளின் பெருமையை உலகம் நன்குணர்ந்து போற்ற முற்பட்டது என்றால் அது மிகையாகாது.

### பிற தமிழ்ப் பணிகள்

திருக்குறளை மொழி பெயர்த்ததோடமையாது நாலடியாரையும் அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். மாணவர்கட்குப் பயன்படக்கூடிய தமிழ் இலக்கண நூல் ஒன்றையும் வரலாற்று நூல் ஒன்றையும்அவர் எழுதி வெளியிட்டார். மாணவர்கட்கு வேண்டிய சிறந்தநீதிகளைத் தொகுத்துக் கூறும் முறையில் திருக்குறள், நாலடியார், பழமொழி, இனியவை நாற்பது போன்ற நீதி நூல்களிலிருந்து சிறந்த பாடல்களைத் தேர்ந்தெடுத்து "தனிச் செய்யுட் கலம்பகம்" என்னும் நூல் ஒன்றையும் தொகுத்து அளித்தார். தமிழ்–ஆங்கில அகராதி ஒன்றையும் அவர் தொகுத்தார். பின்னர்த் தமிழில் வந்த பேரகராதிக்கு அது உறுதுணையாய் அமைந்தது.

### முதுமையில் தமிழ்த் தொண்டு

இங்ஙனம் அறுபதாண்டுகள் தமிழகத்தில் தங்கிக் கிறித்தவ சமயத்திற்கும் தமிழ் மொழிக்கும் ஒப்

பற்ற சேவை புரிந்த போப்பையர் முதுமையில் ஓய்வு வேண்டித் தம் தாயகம் திரும்பினார். அங்குச் சென்ற பின்பும் அவர் தமிழார்வம் அவரை ஓய்ந்திருக்கவிட வில்லை. அம் முதிய பருவத்தில் ஆக்சுபோர்டு பல் கலைக் கழகத்தில் தமிழ்ப்பேராசிரியராக அமர்ந்து இருபதாண்டுகள் தமிழ்த்தொண்டு புரிந்து வந்தார். தமிழின் இனிமையையும் பெருமையையும் அறியாத மேல் நாட்டவர் பலரும் போப்பையரின் மூலம் தமிழின் மாண்புணர்ந்து போற்றலாயினர்.

## திருவாசகத்தில் ஈடுபாடு

போப்பையர் ஆக்சுபோர்டு பல்கலைக் கழகத்தில் தமிழ்ப்பணியாற்றிக் கொண்டிருக்கும்போது சைவ சமய நூல்களில் தலைசிறந்ததான திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க விரும்பினார். பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட மணிவாசகப் பெருந் தகையார் பாடிய உள்ளம் உருக்கும் தெள்ளு தமிழ் நூல் திருவாசகம். 'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்பது அந்நூலைப் பற்றி வழங்கும் முதுமொழியாகும். கற்பவர் நெஞ் சத்தை உருக்கும் அந்தக் கனிவினாலேயே கிறித் தவ சமயத்தவரான போப்பையரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது அந்நூல். உண்மையான பக்தி, சாதி சமயம் கடந்து அனைவரையும் பிணிக்கும் பான்மையுடையது அன்றோ? அதனாலேயே போப் பையர் அந்நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, மேலை நாட்டவர் அதன் பெருமையை உணரச் செய்ய வேண்டும் என்று ஆவல் கொண்டார்.

### மனத்தில் எழுந்த கவலை

உள்ளத்தில் பொங்கி எழுந்த அந்த உணர்ச்சி மிகுதியால் போப்பையர் திருவாசகம் முழுவதையும் பலமுறை படித்து அதன் கருத்துக்களையும் அவற்றின் மூலம் வெளிப்படும் பக்தி உணர்வையும் உள்ளத்தில் தேக்கினர்; பின்னர் மொழி பெயர்ப்புப் பணியில் ஈடுபட்டார். அப்போது அவருக்கு வயது எழுபத்தேழு. தாம் மேற்கொண்ட பணிமுடியும் அளவும் உயிரோடு வாழ்வோமா என்னும் ஐயம் அவர் மனத்தில் அடிக்கடி தோன்றி வருத்தலாயிற்று. ஒரு நாள் போப்பையர் அவருடைய நண்பர் ஒருவருடன் உரையாடிக் கொண்டிருந்த போது திருவாசகத்தின் அருமை பெருமைகளை எல்லாம் அவரிடம் விளக்கிக் கூறினர். அவ்வரிய நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கத் தாம் முற்பட்டிருப்பதாகவும், முதுமையில் மேற்கொண்ட அப்பணி முட்டின்றி முடியுமோ என்று தாம் ஐயுறுவதாகவும் கூறி வருந்தினர்.

### நண்பர் கூறிய உறுதியுரை

அதுகேட்ட அந்நண்பர், "ஒரு நல்ல செயலை மேற்கொண்டு செய்வதே நெடுங்காலம் வாழும் வழி. மேற்கொண்ட பணியில் முழுமனத்தோடு ஈடுபட்டுழைத்து வந்தால் அப்பணி வெற்றி பெறும் வரை இறப்பு அணுகாது; இஃது உறுதியாகும்," என்று எடுத்துரைத்து அப்பணியை ஆர்வமுடன் செய்யுமாறு ஊக்கினர்.

### திருவாசக மொழி பெயர்ப்பு

போப்பையரும் நண்பரின் அவ்வூக்க மொழியையே பற்றுக் கோடாகக் கொண்டு திருவாசகத்தை

மொழிபெயர்த்துத் தம் எண்பதாவது பிறந்த நாளின் போது அதனை அச்சிட்டு வெளிப்படுத்தினர். அந் நூலை வெளியிட்டபோது போப்பையர் அடைந்த மகிழ்ச்சியை அளவிட்டுரைக்க இயலுமோ? எனினும் அந்நூல் வெளிவரக் காரணமாயிருந்து ஊக்க மூட்டிய அந்த நண்பர் அம் மகிழ்ச்சியிற் பங்கு கொள்ளாமல் முன்பே இறந்து விட்டது அவர் மனத்தை வருத்தியது.

### பரிசும் பாராட்டும்

இங்ஙனம் ஆங்கிலேயராகப் பிறந்தும் தமி ழுக்கு அரும் பெருந் தொண்டுகளாற்றிய போப்பை யரின் புலமைத் திறத்தை வியந்தும், அவர் தமிழ்த் தொண்டைப் பாராட்டியும் இராயல் ஏசியாடிக் சங் கத்தார் விக்டோரியா மகாராணியாரின் வயிர விழாப் பரிசாகிய தங்கப் பதக்கத்தினை அவர்க்கு வழங்கிச் சிறப்பித்தனர். அப்போது போப்பையருக்கு வயது எண்பத்தாறு. அவ்வமயம் இந்திய நாட்டு அமைச் சராக இருந்த சர் ஜான் மார்லி என்பவர் விழாவுக் குத் தலைமை வகித்துப் போப்பையரின் பெரும்புலமை யையும் தமிழுக்கு அவர் செய்துள்ள நிலையான தொண்டுகளையும் பலவாறு பாராட்டிப் புகழ்ந்து, அப் பரிசினை வழங்கிச் சிறப்பித்தார். அறிஞர் பலர் போப்பையருக்குப் புகழ்மாலை சூட்டி மகிழ்ந்தனர்.

### போப்பையரின் மறைவு

அதற்கு அடுத்த ஆண்டிலேயே—அஃதாவது கி. பி. 1908 ஆம் ஆண்டில் போப்பையர் இவ்வுலக வாழ்வை நீத்தார்; இறப்பதற்கு முன் தன்னை ஒரு தமிழ் மாணவன் என்று கல்லறையில் எழுதி வைக்

குமாறு வேண்டிக்கொண்டு உயிர்விட்டார். ஆங்கில நன் மக்கள் அவர் விரும்பியவாறே அவரை அடக்கம் செய்யும்போது அவர் மொழி பெயர்த்து வெளியிட்ட அருமைக் குறள் நூலையும் திருவாசகத்தையும் உடன் வைத்து அடக்கம் செய்து அவருடைய நினைவுச் சின்னத்தில் போப்பையர் பெயர் பொறித்து அதன் அடியில் 'ஒரு தமிழ் மாணவர்' என்று எழுதி வைத்தனர். அந்நினைவுச் சின்னம் இன்றளவும் போப்பையரின் தமிழார்வத்தின் சின்னமாய்ப் பொலிவுற்றுத் திகழ்கின்றது.

**நினைவுச் சிலை**

இங்ஙனம் காலமெல்லாம் தமிழ்த் தொண்டே புரிந்து, தமிழையே கற்று, தமிழ் மாணவராகவே வாழ்ந்து மறைந்த பேரறிஞராகிய போப்பையரைத் தமிழ் மக்கள் மறத்தல் இயலுமோ? அவர் நினைவு தமிழர்கள் உள்ளத்தில் என்றும் பசுமையோடு இருக்க வேண்டும் என்பதற்காகவே உலகத் தமிழ் மாநாட்டில் அத்தூய தமிழ் அறிஞருக்குச் சிலையமைத்துப் போற்றியது தமிழகம். அச்சிலை போப்பின் நினைவுச் சிலையாக மட்டுமல்லாமல் தமிழ்நாட்டு இளைஞர்களின் உள்ளத்தில் தமிழார்வத்தை ஊட்டி வளர்க்கும் உருவச் சிலையாகவும் விளங்கும் என்பதில் ஐயமுண்டோ ?

# 7. கால்டுவெல் ஐயர்

'திராவிடம்' என்னும் சொல் மொழி வரலாற்றில் அழியா இடம் பெற்றுள்ள அருமையான சொல்லாகும். இச் சொல்லை முதன் முதலில் மொழி நூல் உலகில் அறிமுகப்படுத்திய பெருமை டாக்டர் இராபர்ட் கால்டுவெல் ஐயருக்கு உரியதாகும். மொழி நூலாராய்ச்சியில் ஆர்வமும் திறமையும் வாய்ந்த ஐயரவர்கள் தமிழ் நாட்டில் சமயத் தொண்டு புரிந்த போது தமிழ்த் தொண்டும் புரிந்து அழியாப் புகழ் பெற்றார். தமிழை ஐயம் திரிபறக் கற்றுத் தெளிந்த அவர், தமிழோடு தொடர்புடைய தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகிய மொழிகளோடு அதனை ஒப்பிட்டு ஆய்ந்து, அவை யாவும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளே என்னும் உண்மையை உலகுக்கு உணர்த்தினர்; அவற்றுள் முதன்மையானது தமிழே என்றும், ஏனைய நான்கு மொழிகளும் அம் மொழியிலிருந்து தோன்றி வளர்ந்த மொழிகளே என்றும் தெள்ளத் தெளிய விளக்கிக் காட்டினர்; இம் மொழிகள் அனைத்தையும் 'திராவிட மொழிகள்' என்று குறிப்பிட்டார். அவர் எழுதிய ஒப்பிலக்கண நூல் மொழி நூலாராய்ச்சியில் ஈடுபடுவார்க்கு ஒரு கலங்கரை விளக்கமாகும்.

### இளமையும் கல்வியும்

இங்ஙனம் மொழித்துறையில் ஒப்பற்ற ஆராய்ச்சி புரிந்து தமிழின் பெருமையை உலகம் உணரச்செய்த தமிழ்த் தொண்டராகிய கால்டுவெல் ஐயர் 1814ஆம்

ஆண்டில் அயர்லாந்து நாட்டில் பிறந்தார்; ஸ்காத் லாந்து நாட்டில் கல்வி கற்ருர். அவர் தம் இளம் பருவத்திலேயே பல மொழிகளைக் கற்பதில் ஆர்வ முடையவராக இருந்தார்; அதனுல், இளம் பருவத் திலேயே கிரீக், இலத்தீன் போன்ற பழமையும் பெரு மையும் வாய்ந்த மொழிகளைக் கற்றுத் தேர்ச்சி பெற் ருர். இங்ஙனம் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங் கிய கால்டுவெல் உயர்நிலைக் கல்வி பெறக் கிளாஸ் கோப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து கருத்துடன் பயின்று வந்தார்.

### தமிழகம் வருதல்

கால்டுவெல் பல்கலைக் கழகத்தில் பயின்று முதன்மையாகத் தேர்ச்சியுற்றுப் பரிசும் பட்டமும் பெற்ருர். பட்டம் பெற்ற பின்னர் அவர் மனம் சம யப் பணியில் நாட்டம் கொண்டது. அவருடைய அறிவாற்றல்களை உணர்ந்த ஆங்கிலநாட்டுக் கிறித் தவ சங்கத்தினர் அவரைத் தம் சங்கத்தில் சேர்த்துக் கொண்டனர். அச்சங்கத்தின் சார்பில் அவர் சமயப் பணிபுரியத் தமிழகத்திற்கு வந்தார். 1838ஆம் ஆண் டில் கால்டுவெல் ஐயர் தமிழகத்தின் தலைநகராகிய சென்னை மாநகரத்திற்கு வந்து சேர்ந்தார். அப் போது அவருக்கு வயது இருபத்து மூன்றேயாகும்.

### தமிழ் கற்றுப் புலமை பெறுதல்

சென்னையில் மூன்ருண்டுகள் தங்கியிருந்தார் கால்டுவெல். அப்போது சென்னையில் புகழுடன் வாழ்ந்த துரூ என்னும் ஆங்கிலேயருடன் தொடர்பு கொண்டு அவருடனேயே வசித்து வந்தார். அந்த ஆங்கில அறிஞர் தமிழில் புலமையுடையவர். தமிழ்

நாட்டில் சமயப் பணிபுரியவந்த கால்டுவெல் ஐயர் தமிழ் மக்களோடு நெருங்கிப் பழகுவதற்கு வசதியாகத் தாமும் தமிழ் கற்க விரும்பினர்; அந்த ஆங்கில அறிஞர் மூலமாகவே மூன்ருண்டுகளில் தமிழை முறையாகக் கற்றுத் தேர்ந்தார்; தமிழுடன் வடமொழியையும் தக்கார் மூலம் கற்றுப் புலமை பெற்ருர். பின்னர் அவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள இடையன்குடி என்னும் சிற்றூரில் சமயத் தொண்டாற்றப் புறப்பட்டார்.

## கால்நடைப் பயணம்

சென்னையிலிருந்து தமிழகத்தின் தென்கோடியில் அமைந்துள்ள இடையன்குடி வரையில் உள்ள நெடுந்தொலை வழியைக் கால்டுவெல் காலால் நடந்தே கடந்தார். அங்ஙனம் அவர் செய்த வழிப் பயணத்தில் இடையிடையே பற்பல இடங்களில் தங்கித் தமிழகத்தின் இயற்கை வளங்களையும் செயற்கை நலங்களையும் உணர்ந்து இன்புற்ருர்; தமிழ் மக்களோடு பழகி அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் பண்பாடுகளையும் உணர்ந்து பரவசமடைந்தார். அவர் கற்ற தமிழும், கண்ட தமிழகக் காட்சிகளும் அவர் சிந்தையைக் கவர்ந்தன. அதனுல் எங்கோ அயர்லாந்தில் பிறந்து, இந்தியாவில் பணியாற்ற வந்த அவர் இந்தியராகவே—தமிழராகவே மாறி விட்டார்.

## இடையன்குடியில் சமயப் பணி

அத்தகைய நல்ல தமிழுணர்வுடன் இடையன்குடியைச் சென்றடைந்த கால்டுவெல் ஐயர், அவ்வூர் எத்தகைய வசதியுமில்லாத சிற்றூராகக் காட்சி

யளிப்பதைக் கண்டார்; அவ்வூரை வசதிகள் நிறைந்த நல்லூராக மாற்றும் பணியையே தம் முதற்பணியாகக் கொண்டார்; அரும்பாடுபட்டு அவ்வூரைச் சீர் திருத்தி அமைத்ததோடு, அங்கு ஒரு சிறந்த கோவிலேயும் உருவாக்கினுர். கால்டுவெல் ஐயர் மிகவும் முயன்று அமைத்த அக்கோயில் இன்றும் இடையன்குடியில் அவருடைய நினைவுச் சின்னமாக நிலவிக் கொண்டிருக்கிறது.

திருநெல்வேலி வரலாறு

கால்டுவெல் ஐயர் முப்பத்து மூன்ருண்டுகள் தமிழ் நாட்டில் வாழ்ந்து சமயத் தொண்டும் தமிழ்த் தொண்டும் புரிந்து வந்தார். அவர் செய்த சமயத் தொண்டினும் மொழித் தொண்டே அவருக்கு அழியாப் புகழைத் தந்தது எனலாம். அவர் தாம் வாழ்ந்து தொண்டு செய்த திருநெல்வேலி மாவட்டத்தின் பால் பேரன்புகொண்டு அதன் வரலாற்றை நன்கு ஆய்ந்து முறையாக எழுதி வெளியிட்டார். பாண்டிய நாட்டின் பழமையும் பெருமையும் அந்நூலில் தெளிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன. அந்நூலின் அருமை பெருமைகளை உணர்ந்து அரசாங்கமே அதனை அச்சிட்டு வெளிப்படுத்தியதோடு, கால்டுவெல் ஐயருக்கு ஆயிரம் ருபா நன்கொடையும் வழங்கிப் பாராட்டியது.

பாண்டிய நாட்டுப் பழைய துறைமுகங்கள்

பாண்டிய நாட்டின் வரலாற்றுப் பெருமையை ஆராய்ந்த போது அந் நாட்டின் பழம் பெருந் துறைமுகங்களாக விளங்கிய கொற்கை, காயல் ஆகியவை பற்றிய செய்திகள் அவர் மனத்தைக் கவர்ந்தன.

அவற்றை ஆராய்ந்து பார்க்க ஆசைப்பட்டார் கால்டு வெல்.

### ஆராய்ச்சியால் விளைந்த பயன்

அவர் அரசியலார் இசைவு பெற்று ஆராய்ச்சி யைத் தொடங்கினர். பல இடங்களில் நிலத்தை அகழ்ந்து பண்டைத் துறைமுகத்தின் அடிச்சுவடு காணப்படுகிறதா என ஆய்ந்தார்; கொற்கைத்துறை தாமிர வருணி கடலுடன் கலக்குமிடத்தில் அமைந் திருந்த காரணத்தால் காலப் போக்கில் ஆற்று மண லால் தூர்ந்துவிட்டது. அதனல் பண்டு துறை முகத்தை ஒட்டியிருந்த கடல் விலகிச் சென்று விட் டது. இந்த உண்மையை அவர் தம் ஆராய்ச்சியின் வாயிலாக உணர்ந்தார். கொற்கைத் துறைமுகம் தூர்ந்த பின்னர்க் காயல் துறைமுகமாக விளங்கி யது. கால்டுவெல் காயலுக்கும் சென்று ஆராய்ச்சி கள் நடத்தினர்; அங்கும் கடல் காலப்போக்கில் நகரைவிட்டு விலகி நிற்பதைக் கண்டார். காயல் துறையும் தூர்ந்த பின்னர்த் தூத்துக்குடி துறை முகமாயிற்று. இவற்றையெல்லாம் தக்க முறையில் ஆய்ந்து வெளிப்படுத்தியதன் வாயிலாகப் பண்டைத் தமிழகத்தின் மாண்பினையும் வாணிகச் சிறப்பையும் வளத்தையும் அனைவரும் அறிந்து உணர்ச்சி பெறச் செய்தார் கால்டுவெல்.

### ஒப்பிலக்கணம் இயற்றல்

இங்ஙனம் வரலாற்றுத் துறையில் ஆய்வுகள் நடத்திய கால்டுவெல் ஐயர் புரிந்த தொண்டுகளில் அவருடைய புகழை என்றும் அழியாமல் நிலைபெறச்

செய்தது அவர் இயற்றிய ஒப்பிலக்கண நூலேயாகும். ஆங்கிலத்தில் அவர் எழுதிய நூல்கள் தென்னகத்தில் வழங்கும் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகிய மொழிகளின் சீரையும் சிறப்பையும் தெளிவாக அறியத் துணை புரிகிறது. கால்டுவெல் ஐயர் ஒப்பியல் நூல் தோன்றுவதற்கு முன் தமிழை வடமொழியோடு ஒப்பிட்டுப் பார்க்கும் வழக்கம் இருந்தது. தமிழ் வடமொழிக் குடும்பத்தைச் சார்ந்தது என்று கருதிய காலமும் ஒன்று இருந்தது. கால்டுவெல் செய்த ஆராய்ச்சியின் பயனாக அக்கருத்து தவறானது என்பது மொழி நூல் உலகத்திற்கு விளங்கியது.

**நூல் தோன்றிய வகை**

கால்டுவெல் ஐயர் தமிழைக் கற்று ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தபோது பிரௌன் என்னும் அறிஞர் தெலுங்கு மொழியைக் கற்று அம்மொழியின் நீர்மையை ஆராய்ந்து கொண்டிருந்தார். டாக்டர் குந்தார்த்தர் என்னும் மற்றோர் அறிஞர் மலையாள மொழியின் மாண்பினை ஆய்ந்து கொண்டிருந்தார். டாக்டர் கிட்டல் என்னும் வேறோர் அறிஞர் கன்னடமொழியின் கவினை ஆராய்ந்து கொண்டிருந்தார். இவ்வறிஞர்கள் ஆய்ந்து வெளிப்படுத்திய அம்மொழிகளின் இயல்புகளை எல்லாம் கால்டுவெல் உணர்ந்து, தாம் அறிந்த தமிழ் மொழியின் இயல்புகளோடு ஒப்பிட்டு ஆராய்ந்து தமிழின் மாண்பினை நிலைநாட்டினார்.

**நூலால் விளைந்த நன்மை**

அவர் இயற்றிய ஒப்பிலக்கண நூலினால் வடமொழியின் இலக்கணம் வேறு, திராவிட மொழி

களின் இலக்கணம் வேறு என்னும் உண்மை தெளி வானது. தமிழ் பிற மொழிகளின் உதவியின்றித் தனித்தியங்க வல்ல ஆற்றல் பெற்ற மொழி—சொல் வளம் நிறைந்த மொழி—பழமையும் பண்பாடும் நிறைந்த உயர் தனிச் செம்மொழி என்னும் உண்மை புலனாயிற்று. அவர் புரிந்த அந்த ஆராய்ச்சியின் பயனாலேயே தமிழ் மொழியின் சிறப்பினையும், அதி னின்றும் தோன்றிய ஏனைய திராவிட மொழிகளின் பெருமையையும் மேலை நாட்டவரும் உணர்ந்து கொள்ள வாய்ப்பு ஏற்பட்டது. கால்டுவெல் மொழித் துறையில் செய்த இம் மாபெருந் தொண்டைப் போற்றும் வகையில் கிளாஸ்கோப் பல்கலைக் கழகத் தார் அவருக்கு 'டாக்டர்' என்னும் உயரிய பட்டத் தினை வழங்கிப் பெருமைப்படுத்தினர். கால்டுவெல் ஐயர் ஒப்பிலக்கண நூலை ஆங்கிலத்தில் இயற்றிய தோடல்லாமல், தமிழ்மொழியில் 'தாமரைத் தடாகம்,' 'நற்கருணை' என்பன போன்ற அழகிய நூல்களை இயற்றியுள்ளமையும் குறிப்பிடத் தக்கதாகும்.

### பரந்த மனப்பான்மை

கால்டுவெல் ஐயர் தமிழகத்தில் வாழ்ந்த ஐம் பத்து மூன்று ஆண்டுகளில் மூன்று முறை இங்கி லாந்து சென்று இளைப்பாறித் திரும்பினார். இறுதி முறையில் அவர் இங்கிலாந்து சென்ற போது அவ ருடைய நண்பர்கள் அவர் தம் முதுமையைக் கருதி அங்கேயே தங்கிவிடுமாறு வேண்டினர். அப்போது அவர் கூறிய அன்பு மொழி நம் உள்ளத்தை உருக்கு வதாகும். "நான் என் வாழ் நாளில் பெரும் பகு தியை இந்திய நாட்டில் கழித்தேன்; இத்தனை கால

மும் இந்தியருக்காகவே வாழ்ந்தேன்; இனியும் நான் அவர்களுக்காகவே வாழ்ந்து, அங்கேயே உயிர் துறக்க விரும்புகிறேன்," என்று கூறினர் கால்டுவெல். அவருக்கு நம் நாட்டின் மீதும், மக்களின் மீதும் இருந்த பற்றினை—உறவை விளக்க இதனினும் வேறு சான்று வேண்டுமோ?

**இறுதி எய்தல்**

கால்டுவெல் ஐயர் அங்ஙனமே முதுமையில் இந்தியாவுக்குத் திரும்பினர். அவர் தம் வாழ்நாளின் இறுதிக் காலத்தில் கொடைக்கானல் மலையில் தங்கியிருந்தார்; அங்கேயே தம் எழுபத்தேழாம் வயதில் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவர் பொன்னுடல் இடையன் குடிக்குக் கொண்டுவரப்பட்டு, அவர் அரும்பாடுபட்டுக் கட்டிய கோவிலிலேயே அடக்கம் செய்யப்பட்டது.

**சென்னையில் சிலை**

இங்ஙனம் தன்னலம் கருதாமல் தமிழ்த் தொண்டு புரிந்த கால்டுவெல் ஐயர் எந்நாட்டைச் சேர்ந்தவராயினும் தமிழன்னையின் தவப்புதல்வர்களில் ஒருவராகக் கொள்ளத்தக்கவர் என்பதில் ஐயம் இல்லை. அவருடைய ஒப்பற்ற தொண்டைப் பாராட்டி உலகத் தமிழ் மாநாட்டில் சிலையமைத்துப் பாராட்டியது தமிழ் மக்களின் நன்றிமறவாப் பண்புக்குச் சான்றாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் எதிரில் அமைந்த அப் பெருமகனாருடைய சிலை பட்டம் பெற்று வெளிவரும் தமிழ் இளைஞர்கட்கு அவர்களுடைய கடமையை நினைவூட்டி, அவர்கள் தமிழுணர்வு கொள்ளத் தூண்டுகோலாய் நின்று நிலவும் என்பதில் ஐயம் இல்லை.

# 8. வ. உ. சிதம்பரனார்

'தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை' என்பது நம் நாட்டு நரை மூதாட்டியின் நல்லுரையாகும். அத் தாயினும் சிறந்தது தாய்நாடு. தாய்நாட்டின்மீது பற்றில்லாதவரும் மனிதராவரோ? அத்தகைய நாட்டுப் பற்றுணர்வால் சொத்து சுகங்களை எல்லாம் இழந்து சிறைப்பட்டும் செக்கிழுத்தும் அல்லல் உழந்த விடுதலை வீரர்கள் பலருடைய அரிய தியாகத்தாலேயே நம் நாடு விடுதலை பெற்றது. நாம் இன்று உரிமை பெற்ற திருநாட்டு மக்களாகத் தலைநிமிர்ந்து வாழ்வதற்கு அவ் வீரர்கள் சிந்திய கண்ணீரும் செந்நீருமே காரணம். அத்தகைய ஒப்பற்ற தியாக வீரர்களில் தலை மாமணியாய்த் திகழ்பவர் 'கப்பலோட்டிய தமிழர்' எனப் போற்றிப் புகழப்படும் மாவீரர் சிதம்பரனார்.

## பிறப்பும் வளர்ப்பும்

சிதம்பரனார் பிறக்கும் பேறுபெற்றது திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஒட்டப்பிடாரம் என்னும் சிற்றூராகும். அச் சிற்றூரில் வேளாளர் மரபில் பிறந்து பெருஞ் செல்வராய் வாழ்ந்துவந்த வழக்கறிஞர் உலகநாதப் பிள்ளை அவர்கட்கும், பரமாயி அம்மையார்க்கும் 1872ஆம் ஆண்டில் சிதம்பரனார் மகனாகத் தோன்றினார். பெற்றோர்கள் இருவரும் கண்ணை இமை காப்பது போலத் தம் அன்புத் திருமகனைக் காத்து வந்தனர். சிதம்பரனார் நாளொருமேனியும்

பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கல்வி கற்கும் பருவம் எய்தினார்.

**கல்வி நலம்**

உலகநாதப் பிள்ளை அவர்கள் தம் அருந்தவச் செல்வரைத் தொடக்கப்பள்ளியில் சேர்த்து எண்ணும் எழுத்தும் பயிலச் செய்தார். பின்னர்ச் சிதம்பரனார் தூத்துக்குடி பிரான்சிஸ் சேவியர் உயர்பள்ளியில் சேர்ந்து அருந்தமிழும் ஆங்கிலமும் திருந்தக் கற்றார். அதன் பிறகு கால்டுவெல் கல்லூரியில் பயின்று மெட்றிகுலேஷன் தேர்வில் வெற்றி பெற்றுத் திரும்பினார். உள்ளத்தை வளர்க்க உயர் கல்வி கற்றதுடன், உடலை வளர்க்கப் பற்பல உடற் பயிற்சிகளையும் செய்து கட்டிளங்காளையாக விளங்கினார் சிதம்பரனார்.

**வழக்கறிஞராதல்**

தம் மைந்தரின் கல்வி முடிந்தவுடன் உலகநாதப் பிள்ளை அவர்கள் அவரை அரசாங்க அலுவலகம் ஒன்றில் பணியாளராக அமர்த்தினார். இளமை முதலே உரிமை வாழ்வில் நாட்டமுடையவராக இருந்த சிதம்பரனார் மனம் அத்தொழிலில் ஈடுபடவில்லை. அவர் மனம் வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்டது. மைந்தரின் ஆர்வத்தை உணர்ந்த தந்தையார் அவரைத் திருச்சிக்கு அனுப்பி அங்குப் புகழ் பெற்று விளங்கிய வழக்கறிஞர்களிடம் பயில ஏற்பாடு செய்தார். இயற்கையிலேயே நுண்ணறிவு வாய்ந்த சிதம்பரனார் விரைவிலேயே சட்ட நுட்பங்களையெல்லாம் கற்று வழக்கறிஞர் தேர்வில் வெற்றி பெற்றார்.

**நேர்மையான வழக்கறிஞர்**

பின்னர்ச் சிதம்பரனார் திருச்செந்தூர் சுப்பிரமணியப் பிள்ளை அவர்களின் அருந்தவச் செல்வியார் வள்ளியம்மையாரை மணந்து தூத்துக்குடியில் வழக்கறிஞராய் வாழ்வைத் தொடங்கினார். வழக்கறிஞர் தொழிலில் வாய்மைவழி ஒழுகினார்; பொய் வழக்குகளை வெறுத்து ஒதுக்கினார்; நியாயமான வழக்குகளையே ஏற்று வாதாடினார்; ஏழை எளியவர்களிடம் பணம் பெருமலேயே அவர்கட்காக நீதிமன்றங்களில் வழக்காடிப் பேருதவி புரிந்தார். அவருடைய நேர்மை உள்ளத்தையும், பெருந்தன்மையினையும் இரக்க குணத்தையும் கண்டு நீதிபதிகள் அனைவரும் அவரை மதித்துப் போற்றலாயினர். அதனால் தொழில் துறையில் சிதம்பரனாரின் புகழ் எங்கும் பரவியது.

மறு மணம்

சிதம்பரனார் இங்ஙனம் பெரும்புகழுடன் வாழ்ந்தபோது அவர் வாழ்வில் ஒரு பெருந்துன்பம் சூழ்ந்தது. உயர் குணங்கட்கு உறைவிடமாக விளங்கிய அவர் மனைவியார் வள்ளியம்மையார் மின்னுமல் இடித்தது போலத் திடுமென இவ்வுலக வாழ்வை நீத்தார். அதனால் சிதம்பரனார் அளவிலாத் துயரம் கொண்டார். வாசுகியாரைப் பிரிந்து வள்ளுவர் நெஞ்சழிந்து வருந்தியது போல் வள்ளியம்மையாரைப் பிரிந்து வேதனைப்பட்டார் சிதம்பரனார். காலப்போக்கில் ஒருவாறு ஆறுதலடைந்த அவர் தம் துணைவியாரின் குடும்பத்தைச் சார்ந்த மீனாட்சி அம்மையாரை மறு மணம் புரிந்துகொண்டு முன்போல் இல்லற வாழ்வை நடத்தி வந்தார்.

### நாட்டு நிலை

அக்காலத்தில் நம் நாட்டைப் பிணித்திருந்த அடிமைத்தளையை அகற்றி உரிமை வாழ்வு பெறக் காங்கிரசுக் கட்சி அரும்பாடுபட்டு வந்தது. 'சுதந்திரம் எமது பிறப்புரிமை' என முழங்கிய மாவீரர் பாலகங்காதர திலகர் தலைமையில் விடுதலை ஆர்வம் கொண்ட வீரர்கள் வரலாற்றுப் புகழ்பெற்ற போராட்டங்களை நிகழ்த்தி வந்தனர். எரிகிற நெருப்பில் எண்ணெய் ஊற்றுவதுபோல அந்நிய அரசாங்கம் அப்போது வங்காளத்தை இந்துவங்காளம், முஸ்லிம் வங்காளம் என இரு கூறுகப் பிரித்தது. அரசாட்சியின் பிரித்தாளும் சூழ்ச்சியைக் கண்டித்து நாடே கிளர்ந்தெழுந்தது. பிரிவினையை எதிர்த்து நாடெங்கும் போராட்டங்கள் நடந்தன. போராட்டத்தின் ஒரு பகுதியாக அந்நியநாட்டுப் பொருள்களைப் புறக்கணிக்கும் இயக்கம் தீவிரமாகியது.

### சிதம்பரனாரின் நாட்டுத் தொண்டு

வீரர் சிதம்பரனார் இயல்பாகவே தாய்நாட்டுப் பற்றும், தாய் மொழிப்பற்றும் கொண்டவர். அதனால் பள்ளத்தில் பாயும் வெள்ளமென அவர் மனம் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டது. அவர் தம் வழக்கறிஞர் தொழிலை உதறித் தள்ளிவிட்டுக் காங்கிரசுக் கட்சியில் சேர்ந்தார்; தம்மிடமிருந்த அந்நிய நாட்டுத் துணிகளை எல்லாம் தீவைத்துக் கொளுத்தினார்; அது முதல் பிறநாட்டுப் பொருள்களை வாங்குவதில்லை என உறுதி பூண்டார்; தமிழ்நாட்டு மக்கள் அனைவரும் அவ்வுறுதியை மேற்கொள்ளுமாறு தீவிரப் பிரசாரம் செய்தார். தம் ஆவேசம் நிறைந்த

சொற்பொழிவுகளால் மக்கள் மனத்தில் விடுதலை உணர்ச்சியை ஊட்டினுர்; வீரக்கனலை மூட்டினுர். அவர் நாவசைந்தால் நாடே அசையும் என்னும் நிலையை உருவாக்கினுர்.

## சுதேசிக் கப்பல் கம்பெனி

சிதம்பரனுர் அவ்வளவோடமையவில்லை; அந்நியர்களுடைய செல்வாக்கிற்கு அவர்கள் வாணிகமே காரணம் எனத் தெரிந்து அதனைக் குலைக்க முடிவு செய்தார். அதனல் இந்திய வாணிகத்துக்கு இடையூருக இருந்த ஆங்கிலக் கப்பல் கம்பெனிக்கு எதிராகச் சுதேசிக் கப்பல் கம்பெனி ஒன்றைத் தொடங்கச் சிதம்பரனுர் பெரு முயற்சி செய்தார்; பல பெருஞ் செல்வர்களைக் கூட்டாகச் சேர்த்து 1906ஆம் ஆண்டில் சுதேசிக் கப்பல் கம்பெனியைத் தொடங்கினுர். பாலவநத்தம் குறுநில மன்னர் பாண்டித்துரைத் தேவர் கம்பெனியின் தலைவராகவும் சிதம்பரனுர் செயலாளராகவும் பொறுப்பேற்றனர்.

## சிதம்பரனுரின் பெரு முயற்சி

முதலில் இரு கப்பல்கள் குத்தகைக்கு வாங்கப்பட்டன. அக் கப்பல்கள் மூலம் தூத்துக்குடிக்கும் கொழும்புக்கும் இடையே போக்குவரத்துத் தொடங்கியது. தமிழ்நாட்டு வணிகர்கள் அனைவரும் ஆதரிக்கத் தொடங்கியமையால் 'ஏற்றுமதி இறக்குமதி பெருகியது. அது கண்டு ஆத்திரமுற்ற ஆங்கிலக் கப்பல் கம்பெனியார் சுதேசிக் கப்பல் கம்பெனிக்குக் குத்தகைக்குக் கப்பல் கொடுத்திருந்தவர்களை அச்சுறுத்தித் தடுத்தனர். அதனை உணர்ந்த வீரர் சிதம்

பரனார் வெகுண்டெழுந்தார்; சொந்தமாகவே கப்பல் வாங்க உறுதிகொண்டார். அதற்குப் பெரும்பொருள் தேவைப்பட்டது. அப் பொருளைத் திரட்டிக் கப்பலோடு தமிழகம் திரும்புவதாகவும், இன்றேல் கடலில் விழுந்து மாள்வதாகவும் சூளுரைத்துச் சிதம்பரனார் வடநாடு சென்றார்.

### கப்பலோட்டிய தமிழர்

சிதம்பரனார் வடநாட்டுப் பெருஞ் செல்வர்கள் பலர் உதவியைப் பெற்றுக் கப்பல் வாங்கப் பெரும் பாடுபட்டார். முயன்றால் முடியாதது உண்டோ? செயல் வீரர் சிதம்பரனார் மேற்கொண்ட செயலைச் செவ்வனே செய்து வெற்றி வீரராய்த் தமிழகம் திரும்பினார். அவருடன் காலியா, லாவோ என்னும் இரு கப்பல்கள் தூத்துக்குடித் துறைமுகத்தை வந்தடைந்தன. ஒரே சமயத்தில் இரு கப்பல்களை விலைக்கு வாங்கிக் கொணர்ந்த மாவீரர் சிதம்பரனாரின் ஆற்றலைத் தமிழகம் வியந்து போற்றியது. 'கப்பலோட்டிய தமிழர்' என அவரைப் பாராட்டியது.

### ஆங்கிலக் கம்பெனியார் சூழ்ச்சி

அஞ்சா நெஞ்சம் படைத்த சிதம்பரனாரின் ஆற்றலைக் கண்டு ஏமாற்றமடைந்த ஆங்கிலக் கப்பல் கம்பெனியார் குறுக்கு வழியில் கேடு சூழ முற்பட்டனர்; தம் கப்பல் கட்டணங்களைக் குறைத்தும், கட்டணம் இல்லாமலேயே பொருள்களை ஏற்றிச் சென்றும் போட்டியை ஏற்படுத்திச் சுதேசிக் கப்பல் கம்பெனியை ஒழிக்க முயன்றனர். நாட்டுப்பற்று வாய்ந்த வணிகர்கள் சிதம்பரனாரையே ஆதரித்தமையால் அவர்கள் முயற்சி பயன்படவில்லை. அம்முயற்சி

யிலும் ஏமாற்றமடைந்த ஆங்கிலேயர்கள் இலட்சம் ரூபா கையூட்டுத் தருவதாகவும், கப்பல் கம்பெனியை விட்டு விலகிவிடுமாறும் சிதம்பரனாருக்கு ஆசை காட்டினர். நாட்டுக்காக உயிரையே வழங்க முன்வந்துள்ள சிதம்பரனார் இந்த நயவஞ்சகத்துக்கு இரையாவாரோ? ஆகவே ஆங்கிலேயர்கள் அம் முயற்சியிலும் தோல்வி கண்டு அவமான மடைந்தனர்.

### சிதம்பரனார் சிறைப்படல்

தோல்வி வெறியாக மாறியது. எப்படியும் சுதேசிக் கப்பல் கம்பெனியையும் சிதம்பரனாரையும் அழித்தொழிக்க அவர்கள் முயன்றனர்; தக்க தருணத்தை நோக்கிக் காத்திருந்தனர். அப்போது விபின சந்திரபாலர் என்னும் அரசியல் பெருந் தலைவர் அரசியல் காரணமாகச் சிறைப்பட்டு விடுதலையடைந்தார். அதனை நாடு பெரு விழாவாகக் கொண்டாடி மகிழ்ந்தது. திருநெல்வேலியிலும் அவ்விழா சீரும் சிறப்புமாக நடைபெற்றது. அரசாங்கம் தடை உத்தரவு போட்டு அவ்விழாவைத் தடுக்க முற்பட்டது. தடையை மீறிச் சிதம்பரனார் விழாவில் கலந்து கொண்டு வீர முழக்கம் செய்தார். அவர் பேச்சு அரசாங்கத்துக்கு விரோதமாக மக்களைத் தூண்டி விடுவதாக அமைந்துள்ளது என்று குற்றம் சாட்டி அரசாங்கம் அவரைக் கைது செய்தது.

### ஆயுள் தண்டனை

சிதம்பரனார் மீது அரசத்துரோக குற்றம் சாட்டி நீதி மன்றத்தில் வழக்கு தொடரப்பட்டது. வழக்கை விசாரித்த நீதிபதி பின்ஹே என்ற ஆங்கிலேயர்

சிதம்பரனார்க்கு ஆயுள் தண்டனை விதித்து நாடு கடத்த உத்தரவிட்டார். என்னே கொடுமை! இதைக் கேட்டு நல்லவர் உள்ளம் எல்லாம் நடுங்கியது. தீர்ப்பு மிகக் கொடுமையானது என அறிஞர்கள் கண்டித்தனர். அப்போது இந்திய மந்திரியாக இருந்த மார்லி பிரபுவே இக் கொடுமையைக் கேட்டு மனம் பதைத்தார் என்றால் வேறு கூற வேண்டுமோ? அவர் அத்தகைய தீர்ப்பு வழங்கிய நீதிபதியை மிகவும் கண்டித்தார். அதன் பயனாக மேல் விசாரணையில் ஆயுள் தண்டனை ஆறாண்டுக் கடுங்காவல் தண்டனையாக மாற்றப்பட்டது. சிதம்பரனார் கோவைச் சிறையில் அடைக்கப்பட்டார்.

### சிறையில் பட்ட துன்பம்

சிறையில் சிதம்பரனார் பட்ட துன்பங்கள் சொல்லில் அடங்காதனவாகும். செக்கிழுத்தும் கல்லுடைத்தும் கேழ்வரகுக் கூழ் குடித்தும் அவர்பட்ட பாடுகளை நினைத்தாலே நெஞ்சம் நடுங்கும். வேந்தரைப் போல வாழ்ந்த வீரர் சிதம்பரனார் வெஞ்சிறையில் வாடினார். இங்ஙனமெல்லாம் அவர் கொடுமைப் படுத்தப்பட்ட போதும் அவர் உடல்தான் தளர்ந்ததே ஒழிய உள்ளம் தளரவில்லை. உறுதி குன்றவில்லை. தாய்நாட்டின் விடுதலைக்குத் தாம் செலுத்தும் அன்புக் காணிக்கையாக எண்ணி அத்துன்பங்களை ஏற்றுத் தியாகத் திருவுருவாக விளங்கினார் தீரர் சிதம்பரனார்.

### துன்பத்தின் மேல் துன்பம்

சிதம்பரனார் இங்ஙனம் சிறையில் அல்லலுற்று வாடியபோது ஆங்கிலக் கப்பல் கம்பெனியார் சூழ்ச்சி

யால் சுதேசிக் கப்பல் கம்பெனி முறிந்தது. அவர் வாங்கிய இரு கப்பல்களையும் ஆங்கிலக் கப்பல் கம் பெனியார்க்கே விற்றுவிட்டனர். தாய்நாட்டின் மானத்தையே விற்பதுபோன்ற இவ்விழிசெயலைக் கேட்டுச் சிதம்பரனார் உள்ளம் துடித்தார். வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சுவது போலச் சுதேசிக் கப்பல் கம்பெனியில் பங்குதாரர்களாக இருந்தவர் கள், கம்பெனி முறிந்ததற்குச் சிதம்பரனாரே கார ணம் எனக் கூறி, ஏற்பட்ட பொருளிழப்பை அவரே ஈடுசெய்ய வேண்டும் என்று வழக்குத் தொட ரவும் முற்பட்டனர். அதையறிந்து உள்ளங் குமுறி னார் சிதம்பரனார். அவர் சிறையிலிருந்தே ஒரு வேண்டுகோள் விடுத்தார். தாம் சிறையிலிருந்து மீளும் வரை பொறுமையோடிருந்தால் அவ்விழப்பிற் குத் தாமே ஈடு செய்வதாகக் கூறினார். அவருடைய நேர்மையையும் பெருந்தன்மையையும் என்னெனப் போற்றுவது!

## சிறையில் தமிழ்த் தொண்டு

இங்ஙனம் துன்பத்தின் மேல் துன்பம் வந்த போதும் 'இடுக்கண் வருங்கால் நகுக' என்ற வள்ளு வர் வாய்மொழியை உறுதுணையாகக் கொண்டு சிதம் பரனார் நிலைகுலையாமல் நின்றார். அந்நிலையில் அவர் மனத்திற்கு ஆறுதல் அளித்துக் காத்துவந்தது நம் இன்பத் தமிழேயாகும். சிதம்பரனார் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்ற பெரும் புலவர்; சொற் சுவை பொருட்சுவை நிரம்பக் கவிபாடும் திறம் கைவரப் பெற்றவர். அதனால் அவர் ஓய்வு நேரங் களில் தமிழ் நூல்களைப் படிப்பது, ஆராய்வது முதலிய

பணிகளில் ஈடுபட்டார்; மனம் போல வாழ்வு, அகமே புறம், மெய்யறிவு, வலிமைக்கு மார்க்கம் என்னும் நூல்களை இயற்றினார்; திருக்குறளை ஆராய்ந்து சிறந்த குறிப்புரைகள் எழுதினார்.

### விடுதலை பெறல்

சிதம்பரனார் இங்ஙனமாகத் தம் தண்டனைக் காலத்தைக் கழித்து 1912ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் விடுதலை அடைந்தார். ஆனால் விடுதலை அடைந்த அம் மாவீரரை வரவேற்று உபசரிக்க அப் போது தமிழகத்தில் ஒருவரும் இல்லாமற்போனது கொடுமையினும் கொடுமையாகும். அந்நிய ஆட்சி யின் கொடுமைக்கு அஞ்சியோ, வேறு எக்காரணத் தாலோ தமிழ் மக்கள் அவரை உரிய முறையில் போற்றத் தவறிவிட்டனர். விடுதலையடைந்த வீரர் சிதம்பரனார் உடைந்த உள்ளத்துடன் பல்லாண்டுக் காலம் சென்னையில் வாழ்ந்து வந்தார்.

### வறுமையின் கொடுமை

அரசரைப் போல வாழ்ந்த சிதம்பரனார் சிறைப் பட்டதன் காரணமாக வழக்கறிஞராய்த் தொழில் நடத்தும் உரிமையை இழந்துவிட்டமையால் வரு வாய்க்கு வழியின்றி வறுமை வாய்ப்பட்டு வருந்தினார். அதனை அறிந்த வாலஸ் என்னும் நீதிபதி மனம் கசிந்துருகினார். அவருடைய நன்முயற்சியால் இழந்த உரிமையைத் திரும்பப் பெற்ற சிதம்பரனார் முன் போல் தூத்துக்குடியில் வழக்கறிஞர் தொழில் புரிந்து வாழ்ந்து வந்தார். அப்போதும் அவர் தம் தாய் மொழியையும் தாய்நாட்டையும் மறக்கவில்லை; சிறை யில் தாமியற்றிய நூல்களையெல்லாம் வெளியிட்டார்.

தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலை இளம் பூரணர் உரையுடன் பதிப்பித்தார். ஆனல் அரசிய லில் முன்போல் தீவிரமாக ஈடுபடாமல் விலகி வாழ்ந்து வந்தார்.

### நன்றி மறவா நல்லோர்

வீரர் சிதம்பரனரை நினைக்கும்போது அவ ருடைய ஒப்பற்ற தியாக உணர்வே நம் உள்ளத் தைக் கவரும். அதற்கு அடுத்து அவர்பால் சிறந்து விளங்கியது நன்றி மறவா நற்பண்பாகும். தமக்கு உற்றுழி எல்லாம் உதவிபுரிந்த நண்பர்களை அவர் என்றும் மறந்ததில்லை. சுதேசிக் கப்பல் கம்பெனி வளர்ச்சிக்காக ஊக்க மூட்டி உதவிபுரிந்து வந்த ஆறுமுகம் பிள்ளை என்பவரின் நினைவாகத் தம் மைந்தர்களுள் ஒருவருக்கு ஆறுமுகம் என்று பெய ரிட்டார். இழந்துவிட்ட வழக்கறிஞர் உரிமையைத் திரும்பப்பெற உதவிய நீதிபதி வாலஸ் துரையின் நினைவாக மற்ருெரு மைந்தர்க்கு வாலீசுவரன் என்று பெயரிட்டுத் தம் நன்றியுணர்வைப் புலப்

### புகழுடம்பு எய்தல்

இங்ஙனம் தியாகத்தின் திருவுருவாய், ஒழுக்கத் தின் சிகரமாய், மாற்ருரும் தலைவணங்கிப் போற்றும் மாண்பினராய் விளங்கிய மாவீரர் சிதம்பரனர் 11-11-1936 அன்று பொன்னுடலை நீத்துப் புக ழுடம்பு எய்தினர். அவர் மறைந்தாலும் அவருடைய தியாக உணர்வே இந்நாட்டு மக்களைத் தட்டி எழுப் பியது. நாட்டு விடுதலைக்காக மாபெருந் தியாகங்

களைச் செய்யத்தூண்டியது. அத்தகைய தியாகத்தின் பயனாகவே நம் நாடு விடுதலைபெற்றது; உரிமை வாழ்வு மலர்ந்தது. இன்றைய நம் உரிமை வாழ்வுக் குத் தம் வாழ்வையே எருவாக்கி, செங்குருதியை நீராக்கி உழைத்த சிதம்பரனாரை நாம் மறக்க இயலுமோ ?

**நினைவுச் சின்னம்**

நாடு விடுதலை பெற்றபின் வீரர் சிதம்பரனார்க் குப் பற்பல வழிகளில் அஞ்சலி செலுத்தப்பட்டது. தூத்துக்குடிக்கும் இலங்கைக்கும் போக்குவரத்துச் செய்ய வாங்கிய முதற்கப்பலுக்கு 'வி. ஓ. சிதம்பரம்' என்று பெயரிடப்பட்டது. சிதம்பரனார் கனவு நன வாகியது. நாட்டுத் தொண்டர் என்ற முறையில் மட்டுமல்லாமல் சிதம்பரனார் தமிழ்த் தொண்டர், பெரும்புலவர் என்ற வகையிலும் தமிழ் மக்கள் உள் ளத்தில் குடிகொண்டவராவர். அத்தகைய தலைவ ருக்கு உலகத்தமிழ் மாநாட்டில் சிலையமைத்துப் போற்றியது தமிழ் மக்களின் நன்றியுணர்வுக்குச் சான்றாகும். கப்பலோட்டிய தமிழரின் சிலை கப்பல் துறைமுகத்துக்கு எதிரில் அமைந்ததும் சாலப் பொருத்தமாகும். வீரர் சிதம்பரனாரின் திருவுருவச் சிலை நம் நாட்டு மக்கள் உள்ளத்தில் அவர் ஏற்றி வைத்த தியாகச் சுடர் அணையாமல் காக்க வழி காட்டும் என்பது உறுதியாகும்.

# 9. மகாகவி பாரதியார்

நல்லறிஞர் உள்ளத்தில் ஊறிய உணர்ச்சி பொங்கிப் பெருகிச் செஞ்சொற் கவிதையாக உருப் பெறுகிறது. உண்மை யுணர்வில் தோய்ந்து பண் பட்ட மனத்திலிருந்தே உயிருள்ள கவிதைகள் பிறக் கும். அக்கவிதைகள் படிப்போர்க்கும் கேட்போருக் கும் பாலெனத் தேனென இனிப்பதுடன் அவர்கள் உள்ளத்தையும் பண்படுத்தும். அத்தகைய உயி ருள்ள கவிதைகளை இயற்றி அழியாப் புகழ் பெற்ற வர்களே 'கவிஞர்கள்' எனப் போற்றிப் புகழ்தற்கு உரியவராவர். செந்தமிழ்நாட்டில் அச்சீரிய கவிஞர் பரம்பரை வழிவழி வளர்ந்து வந்துள்ளது. அப்பரம் பரையில் தோன்றி இந்த இருபதாம் நூற்றுண்டில் தம் இணையிலாக் கவித்திறத்தால் பெரும்புகழ் பெற்றவர் மகாகவி பாரதியார்.

## பாட்டுக்கொரு புலவன்

தமிழின் பெருமைக்கும், தமிழ்நாட்டின் உயர் வுக்கும், தமிழ் மக்களின் முன்னேற்றத்திற்கும், பார தத்தின் விடுதலைக்கும் அவர் ஆற்றிய தொண்டுகள் வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கனவாகும். தமிழிலக்கியத் துறையில் புதிய மறு மலர்ச்சியைப் புகுத்திக் கல்லாரும் கற்றவரும் பாடிக் களிப்படையுமாறு இனிய சந்தப்பாட்டு நடையை மேற்கொண்டு தமிழ் வளர்த்த புதுமைக் கவிஞர் நம் பாரதியார். அந்நிய ஆட்சியில் சிக்கி அறம் மறந்து,

தம் நிலை குலைந்து செயலிழந்து பாமரராய், ஊமைய ராய் வாழ்ந்து வந்த மக்கள் உள்ளத்தில் உரிமைக் கனலை மூட்டிப் 'பூமியில் எவர்க்கு மினி அடிமை செய்யோம்' எனப் பொங்கி எழச்செய்த தேசீய கவி ஞர் பாரதியார். அதனாலேயே தம் பாட்டுத் திறத் தாலே நாட்டு மக்களை நல்லுணர்வு பெறச்செய்த மகாகவி பாரதியாரைப் 'பாட்டுக்கொரு புலவன்' எனப் பாராட்டிப் புகழ்ந்தார் கவிமணி.

### பிறப்பும் இளமையும்

தித்திக்கும் செந்தமிழில் தேச விடுதலைக் கீதம் இசைத்த உத்தமக் கவிஞராகிய பாரதியார் திரு நெல்வேலி மாவட்டத்தில் உள்ள எட்டயபுரத்தில் 1882 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் பதினோராம் நாள் சின்னசாமி ஐயருக்கும் இலக்குமி அம்மை யார்க்கும் நன் மகனாய்த் தோன்றினார். பெற்றோர்கள் அவர்க்குச் சுப்பிரமணியன் என்று பெயரிட்டுக் கண் ணின் மணிபோலக் காத்து வளர்த்து வந்தனர். பாரதியார் இளமையில் மிகவும் செல்வமாக வளர்ந்தார். பெற்றோரும் மற்றோரும் அவரைச் சுப்பையா என்று செல்லப் பெயரிட்டு அழைத்தனர். பிஞ்சுப் பருவத்திலேயே அவர் அஞ்சா நெஞ்சமும் ஆண்மையும் உடையவராகத் திகழ்ந்தார். கூரிய அறிவும் கொள்ளை அழகும் கொண்டு விளங் கிய அவரை ஊரார் அனைவரும் விரும்பினார்.

### தாயை இழத்தல்

இங்ஙனம் அனைவரும் விரும்புமாறு வளர்ந்து வந்த பாரதியாரின் இளமை வாழ்வில் எதிர்பாராத ஒரு பேரிடி வீழ்ந்தது. மின்னாமல் இடித்ததுபோல

அவருடைய அன்புத் தாயார் இவ்வுலக வாழ்வை நீத்தார். அப்போது அவருக்கு வயது ஐந்தேயாகும். தாயின் அன்பணைப்பில் தவழ்ந்து வளரவேண்டிய அந்தப் பருவத்திலே அவர் அன்னையை இழந்து வாடினார். சின்னசாமி ஐயர் தம் அன்புச் செல்வனைப் போற்றி வளர்க்க வள்ளியம்மாள் என்பவரை மறு மணம் புரிந்துகொண்டார். அன்பே உருவான அந்த அம்மையார் சுப்பையாவைத் தாம் பெற்ற குழந்தை யாகவே பாராட்டிச் சீராட்டி வளர்த்து வந்தார்.

## பள்ளிப் படிப்பு

சுப்பையா கல்வி கற்கும் பருவம் அடைந்தவுடன் தந்தையார் அவரைப் பள்ளியில் சேர்த்துக் கல்வி பயிலச்செய்தார். தம் மைந்தன் ஆங்கிலப் புலமையிற் சிறந்து உயர்ந்த பதவியில் அமரவேண்டும் என்பது அவர் ஆவல். ஆனால் சுப்பையாவோ தம்மோ டொத்த தோழர்களோடு ஆடிப்பாடி அகம் மகிழ் வதிலும் இயற்கை அழகுகளைக் கண்டு இன்புறு வதிலும் நாட்டமுடையவராக இருந்தார். அதனால் பள்ளிப் படிப்பு அவருக்கு ஒரு சிறைவாசமாகவே இருந்தது.

## பிறவிக் கவிஞர்

பாரதியார் ஒரு பிறவிக் கவிஞர். கவிபாடும் திறமை அவருக்குக் கருவிலே வாய்த்த திருவாக அமைந்திருந்தது. அவர் தம் ஏழாம் வயதிலேயே கவிபாடத் தொடங்கிவிட்டார். காணுகின்ற காட்சி களை எல்லாம் தம் கவிதைகளில் அமைத்து மகிழ்வ திலேயே அவர் ஆர்வமுடையவராக இருந்தார். எப்

போதும் அவர் மனம் கவிதை மோகத்திலேயே மூழ்கிக் கிடந்தமையால் பள்ளிப் பாடங்களை அவர் கவனிக்க மாட்டார். அதனால் ஆசிரியர் கடிந்து பேசுவார். அப்போதும் ஆசிரியர் கூறும் அவ்வசைச் சொற்களுக்கு ஏற்ற அடுக்கு மொழிகளை—எதுகைச் சொற்களைச் சொல்லிப் பார்த்துக் கொள்வாரே ஒழியப் பாடங்களில் கவனம் செலுத்தமாட்டார்.

## பாரதி பட்டம்

சுப்பையா எவ்வளவுக்கெவ்வளவு பள்ளிக் கல்வியை வெறுத்தாரோ அவ்வளவுக்கு ஆர்வமுடன் தமிழ் கற்பதில் ஈடுபட்டார்; தமிழ்ப் புலவர் ஒருவரையடுத்துத் தமிழிலக்கியங்களை முறையாகக் கற்று வந்தார். தமிழ் இலக்கியங்களைக் கற்கக் கற்கச் சுப்பையாவுக்குத் தாமும் கம்பரைப் போல் வள்ளுவர் போல் கவிஞராக, பெரும் புலவராக ஆக வேண்டும் என்னும் ஆவல் கிளர்ந்தெழுந்தது. அதனால் அவர் தம்மிடம் இயல்பாய் அமைந்திருந்த கவிபாடும் திறமையை வளர்த்து வந்தார். எட்டு, ஒன்பதாம் வயதிலேயே அவர் கேட்டவர் வியக்கும் வண்ணம் கவிபாடும் திறம் பெற்றிருந்தார். அவருடைய கவித்திறமையை அறிந்த பலர் அவரை 'வரகவி' என்று பாராட்டலாயினர். சுப்பையாவின் கவித்திறமையை அறிந்த எட்டயபுரத்து அரசர் அவரை அழைத்து அவருடைய அற்புதக் கவிகளைக் கேட்டு மகிழ்ந்தார். அவருக்குப் 'பாரதி' என்று பட்டம் வழங்கிப் பாராட்டினார். அதுமுதல் அவர் சுப்பிரமணிய பாரதியார் என்றே அனைவராலும் அழைக்கப்பட்டார்.

### கல்லூரிக் கல்வி

தம் மைந்தரின் கவித் திறமையை அறிந்து தந்தை மகிழ்ந்தனராயினும், அவர் தம் மைந்தர் உயர் கல்வி கற்று ஆங்கிலப் புலமை பெற்று விளங்க வேண்டு மென்றே விரும்பினர். தந்தையாரின் ஆவலைப் புறக்கணிக்க இயலாமல் பாரதியார் திரு நெல்வேலி சென்று இந்துக் கல்லூரியில் சேர்ந்து பயின்று வந்தார். அங்கும் அவர் மனம் தமிழைக் கற்பதிலும் கவி பாடுவதிலுமே ஈடுபட்டது. மேல் நாட்டுக் கல்வியில் அவர் உள்ளம் ஈடுபடவில்லை.

### காந்திமதி நாதர் செருக்கடக்கல்

இங்ஙனம் பாரதியார் நெல்லையில் பயின்று கொண்டிருந்தபோது ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. காந்திமதி நாதப் பிள்ளை என்ற தமிழ்ப் புலவர் ஒருவர், சிறுவராகிய பாரதியாரின் கவித்திறமையைக் கண்டு அழுக்காறு கொண்டார். அதனல் ஒரு சமயம் அவர் பாரதியாரை இழிவு படுத்த எண்ணிப் 'பாரதி சின்னப் பயல்' என்பதை ஈற்றடியாக வைத்து ஒரு வெண்பாப் பாடுமாறு பாரதியாரிடம் குறும்பாகக் கூறினர். அவருடைய அந்தக் குறும்புத்தனத்தைக் கண்டு வெகுண்ட பாரதியார் உடனே வெண்பா வைப் பாடினர். அப்பாட்டின் பின் இரண்டடிகள்,

> "காரதுபோல் நெஞ்சிருண்ட காந்திமதி நாதனைப்
> பாரதி சின்னப் பயல்,"

என்று அமைந்திருந்தன. 'காந்திமதி நாதனைப் பார்அதி சின்னப் பயல்' என்று பிரித்துப் பொருள் கொள்ளுமாறு அமைந்த அப்பாடலைக் கேட்ட காந்தி மதி நாதப் பிள்ளை வெட்கித் தலைகுனிந்து சென்றார்.

## இளமையில் திருமணம்

அப்போது பாரதியாருக்கு வயது பதினைந்து தான். அக்கால வழக்கப்படி தம் மைந்தருக்குத் திருமணம் செய்து வைக்க முயன்றார் சின்னசாமி ஐயர். திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த கடயம் என்னும் ஊரில் வாழ்ந்து வந்த செல்லப்ப ஐயரின் மகள் செல்லம்மாள் பாரதியார்க்கு வாழ்க்கைத் துணைவியாகும் பேறு பெற்றார்.

## தந்தையார் பிரிவும் காசி வாழ்க்கையும்

மணம் நிகழ்ந்த மறு ஆண்டிலேயே பாரதியார் வாழ்வில் பெருந்துன்பம் சூழ்ந்தது. தந்தை சின்னசாமி ஐயர் இவ்வுலக வாழ்வை நீத்தார். அதனால் பாரதியார் ஆதரவற்று வருந்தினார். அப்போது அவருக்கு ஆதரவளித்துக் காக்க அத்தை குப்பம்மாள் முன் வந்தார். அதனால் பாரதியார் அத்தையுடன் அவர் வாழ்ந்த காசிக்குச் சென்றார். பாரதியார் காசியில் சில ஆண்டுகள் தங்கியிருந்த போது இந்தி மொழியையும் சமஸ்கிருதத்தையும் நன்கு கற்றார். அலகாபாத் பல்கலைக்கழகத்தார் நடத்திய புகுமுகத் தேர்வில் வெற்றி பெற்று ஒரு பள்ளியில் ஆசிரியராய்ப் பணியாற்றி வந்தார்.

## அரசவைப் புலவர்

அவர் காசியில் வாழ்ந்து கொண்டிருந்த அச்சமயத்தில் காசிக்கு வந்த எட்டயபுரத்து அரசர் பாரதியாரைக் கண்டார். பாரதியாரின் அறிவாற்றலை உணர்ந்த அவர், பாரதியாரைத் தம்முடன் அழைத்துச் சென்று தம் அரசவைப் புலவராக்கிக்கொள்ள

விரும்பினர். மன்னருடைய அன்பழைப்பைப் புறக் கணிக்க முடியாமல் பாரதியார் எட்டயபுரம் வந்து சேர்ந்தார். அரசவைப் புலவராக விளங்கிய பாரதி யார்க்கு வேலையொன்றும் இல்லை. மன்னருக்கு உற்ற தோழராக அவருடன் அளவளாவிப் பொழுது போக்குவதும், வேடிக்கையாகக் கவிதைகள் புனைந்து அரசருக்கு இன்பமூட்டுவதுமே அவருடைய பணி கள். நுண்ணறிவும் சுறுசுறுப்பும் வாய்ந்த பாரதி யாருக்கு இச்சுக வாழ்க்கை வெறுத்துவிட்டது.

### சுதந்தர வாழ்வில் ஆர்வம்

பறந்து திரியும் பைங்கிளியைப் பொற்கூட்டில் அடைத்துப் பழமும் பாலும் ஊட்டினாலும் அது சுதந் தரமாய்ப் பறந்து திரிவதையே விரும்புவதுபோலப் பாரதியாரும் அரண்மனை வாழ்வைத் துறந்து சுதந் தரமாக வாழத் துடித்தார். இரண்டாண்டுகளை இரண்டு யுகங்களைப்போலக் கழித்த பாரதியார் அதற்குமேல் அங்கிருக்க விரும்பாமல் எட்டய புரத்தை விட்டகன்றார்; அவர் மதுரை மாநகரை அடைந்து அங்கு உள்ள சேதுபதி உயர் பள்ளியில் மூன்று திங்கள் தமிழாசிரியராய்ப் பணியாற்றினார்; அத்தொழிலிலும் அவர் மனம் ஈடுபடாமையால் மது ரையைவிட்டுச் சென்னை வந்து சேர்ந்தார்.

### சுதேசமித்திரன் துணையாசிரியர்

சென்னையில் அப்போது சீரும் சிறப்புமாக நடந்து வந்த 'சுதேசமித்திரன்' நாளிதழில் பணி யாற்றும் வாய்ப்பு பாரதியாருக்குக் கிடைத்தது. இரண்டரை ஆண்டுக்காலம் அவ்விதழில் சிறப் பாகப் பணியாற்றினார் பாரதியார். அக்காலத்தில்

நம் நாட்டில் விடுதலைக் கிளர்ச்சி வீறுகொண்டெழுந் தது. உரிமை உணர்ச்சியுடைய பாரதியாரும் இப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டார். உரிமைக் கனலை மூட்டிவிடும் கட்டுரைகள், கவிதைகளைப் பாரதியார் எழுதிவந்தார். அவை நாட்டு மக்க ளிடையே நல்ல வரவேற்பைப் பெற்றன.

## 'இந்தியா'வின் ஆசிரியர்

விடுதலைப்போரில் தீவிரவாதியாக விளங்கியவர் திலகர். அவரைப் பின்பற்றித் தீவிரவாதியாக விளங் கிய பாரதியார் தம் உள்ளத்து உணர்ச்சிகளை எல் லாம் சுதேச மித்திரனில் எழுத இயலாமல் தவித் தார். அதற்காக 'இந்தியா' என்னும் வார இதழ் தொடங்கப்பட்டது. அதன் ஆசிரியராய் அமர்ந்து பாரதியார் தம் எழுத்தாற்றலால் உறங்கிக் கிடந்த தமிழ்நாட்டைத் தட்டி எழுப்பினர். பாரதியார் அவ் விதழின் மூலம் எழுதிய ஆவேசம் மிக்க கவிதைகளை யும் கட்டுரைகளையும் கண்டு அஞ்சிய அரசாங்கம் அவரைச் சிறைப்படுத்தத் திட்டமிட்டது.

## புதுவை வாழ்க்கை

பாரதியார் சிறைக்கு அஞ்சினரல்லர். நாட்டுக் காகச் சிறைபுக ஆயத்தமாக இருந்தார். ஆனல் அவருடைய நண்பர்கள் மக்கள் மனத்தில் கனன்று கொண்டிருக்கும் சுதந்தரத் தீ அணைந்துவிடாமல் காக் கப் பாரதியார் வெளியில் இருக்கவேண்டும் என்று விரும்பினர்கள். அவர்களுடைய வற்புறுத்தலுக்கு இணங்கிப் பாரதியார் தந்திரமாகப் புதுச்சேரியைச் சென்றடைந்தார். புதுவை அப்போது பிரெஞ்சு ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தமையால் அந்நிய

ஆட்சியின் கொடுமைக்குத் தப்பிய சுதந்திரவீரர்கள் உலவும் சோலையாக விளங்கியது. அரவிந்த கோஷ், வ. வே. சு. ஐயர் போன்ற புரட்சி வீரர்கள் புதுவையைப் புகலிடமாகக் கொண்டனர். பாரதியார் அவர்களோடு அளவளாவி இன்புற்ருர்; நாட்டுத்தொண்டில் முன்னிலும் தீவிரமாக ஈடுபட்டார். பாரதியார் புதுவையிலிருந்து 'இந்தியா'வைத் தொடர்ந்து நடத்திஞர். அதற்குத் துணையாக 'விஜயா' என்னும் நாளிதழையும், 'கர்மயோகி' என்னும் மாத இதழையும், 'பாலபாரதம்' என்னும் ஆங்கில வார இதழையும் அவர் நடத்திவந்தார்.

**தொல்லை தொடர்ந்தது**

ஆங்கில ஆட்சி புதுவையிலும் பாரதியாரை அமைதியாக வாழவிடவில்லை. இந்தியக் காவல் துறையைச் சார்ந்த உளவாளிகள் அவரை நிழல் போல் தொடர்ந்து தொல்லை கொடுத்து வந்தனர். அரசினர் புதிய சட்டம் கொண்டுவந்து பாரதியார் நடத்திய பத்திரிகைகள் இந்திய எல்லைக்குள் நுழையாதவாறு தடுத்தனர். அதனல் பாரதியார் அவ்விதழ்களை நிறுத்த நேரிட்டது. மேலும் பாரதியார்க்குப் பணம் அனுப்புபவர்களை எல்லாம் ஆங்கில அரசு அச்சுறுத்தியமையால் அவர் வறுமை வாய்ப்பட்டு அல்லல் உழந்தார். அச்சமயங்களில் பாரதியாருடைய நண்பர்களும் மாணவர்களுமே அவருக்கு 'உற்றதுணையாய் இருந்து காத்து வந்தனர்.

**இலக்கியப் படைப்பு**

பாரதியார் நடத்திய பத்திரிகைகள் யாவும் நின்றுவிட்டமையால் அவர் தம் ஆற்றலை நூல்கள் எழுதுவதில் திருப்பினர். பகவத்கீதை மொழிபெயர்ப்பு,

கண்ணன்பாட்டு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் முதலிய நூல்களை ஒரே ஆண்டில் (1912) அவர் இயற்றினார். அவை அவருடைய ஆழ்ந்த அறிவையும், கடவுட் பக்தியையும், கற்பனைத் திறனையும், வீர உணர்ச்சியையும் விளக்கும் ஒப்பற்ற இலக்கியங்களாம். அவற்றுள் 'பாஞ்சாலி சபதம்' சிறந்த காவியம் என மதிக்கத்தக்க பேரழகும் பெருமையும் வாய்ந்ததாகும். பாரதியாரை 'மகாகவி' எனப் போற்றும் பெருமை இணையற்ற இப்படைப்புக்களின் மூலமாகவே ஏற்பட்டது. இவை தவிரப் பாரதியார் ஞானரதம், தராசு, சின்னச்சங்கரன் கதை முதலிய உரைநடை இலக்கியங்களையும் எழுதினார்.

### சிறைப்படல்

இங்ஙனம் எண்ணற்ற இன்னலுக்கிடையே வறுமையின் கோரப்பிடியில் சிக்கிப் பத்தாண்டுகள் புதுவையில் வாழ்ந்தார் பாரதியார். அவர் பட்ட அளவிலாத் துன்பங்களால் புதுவை வாழ்க்கை அவருக்கு வெறுத்துவிட்டது. அரசியல் சூழ்நிலையிலும் அப்போது ஓரளவு அமைதி நிலவியதால் பாரதியார் துணிந்து தம் குடும்பத்துடன் இந்தியாவுக்குப் புறப்பட்டார். அவர் புதுவை எல்லையைத் தாண்டியவுடன் சிறை செய்யப்பட்டார். எனினும் செல்வாக்கு மிக்க தலைவர்கள் பலர் செய்த முயற்சியால் இருபத்து நான்கு நாள் சிறைவாசத்துக்குப் பின் பாரதியார் விடுதலையடைந்து தம் மனைவியார் தங்கியிருந்த கடயம் சென்று சேர்ந்தார்.

### மீண்டும் சென்னை வாழ்க்கை

கடயம் வாழ்க்கை சில நாட்கள் வரை பாரதியாருக்கு இதமாக இருந்தது எனினும் சுறுசுறுப்பான

அவர் சோம்பியிருக்க மனமின்றிக் குடும்பத்துடன் மீண்டும் சென்னை வந்து சேர்ந்தார். சுதேசமித்திரன் மீண்டும் பாரதியாருக்கு ஆதரவு அளிக்க முன் வந்தது. பாரதியாரும் முன்போல் துணையாசிரியராய் அமர்ந்து தம் எழுத்துப் பணியைத் தொடர்ந்து செய்து வந்தார்.

**தீர்க்கதரிசி**

ஒரு மகாகவிக்கு இருக்க வேண்டிய பண்புகள் யாவும் பாரதியாரிடம் அமைந்திருந்தன. பாரதியார் பரந்த நோக்கம் உடையவர்; சாதி சமய வேறுபாடு கருதாதவர்; மனித இயல்பை நன்கு உணர்ந்தவர்; தெய்வ பக்தி உடையவர். இவை எல்லாவற்றிற்கும் மேலாக எதனையும் கற்பனைக் கண்கொண்டு நோக்கும் கவிதாசக்தியும் எதிர்காலத்தில் நிகழப்போகும் பல நிகழ்ச்சிகளைத் தம் தீர்க்க தரிசனத்தால் முன்பே உணர்ந்து கூறும் ஆற்றலும் வாய்ந்தவராக அவர் விளங்கினார். அவர் தம் தீர்க்க தரிசனத்தால் உணர்ந்து கூறிய பல நிகழ்ச்சிகள் இன்று நடைபெற்று வருகின்றன. சுதந்திரம் அடையாத முன்பே நாம் சுதந்திரம் பெறுவது உறுதியென உணர்ந்து,

> 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே
> ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம்
> என்று ஆடுவோமே'

என்று கவிபாடிக் களித்தவர் அல்லரோ பாரதியார்?

**மொழிப் பற்றும் நாட்டுப் பற்றும்**

பாரதியாரை எண்ணும் போது அவருடைய மொழிப் பற்றும் நாட்டுப் பற்றுமே நம் மனக்கண்

முன் நிற்கும். அமிழ்தினும் இனிய நம் தமிழ்மொழி யிடத்தில் அவர் கொண்டிருந்த பற்று சொல்லில் அடங்காததாகும். 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்' என்று மார்தட்டிப் பேசும் பாடலில் அவருடைய தாய்மொழிப் பற்று சுடர்விட்டொளிர்தலைக் காணலாம். நாட்டுப் பற்றே உருவாக அமைந்தவர் பாரதியார். அவர் வீர சுதந்திரத்தைத் தவிர வேறெதனையும் விரும்பா தவர் விதந்தரு கோடியின்னல் விளைந்து பதந்திரு இரண்டும் மாறிப் பழிமிகுந்து இழிவுற்றபோதும் சுதந்திர தேவியைத்தொழ மறவாத தியாகத்தின் சிகரம் பாரதியார். அவர் பாடிய நாட்டுப் பாடல் களில் அவருடைய விடுதலை ஆர்வத்தை—நாட்டுப் பற்றை—தியாக உணர்வை விரிவாகக் காணலாம்.

### சீர்திருத்த சிற்பி

பாரதியார் நாட்டு விடுதலையை மட்டும் பாடின ரல்லர். நாடு விடுதலை பெற வேண்டுமானால், பெற்ற விடுதலை நிலைபெற வேண்டுமானால் நம் நாட்டில் நிலவும் கொடிய சாதிமத பேதங்கள் ஒழிய வேண் டும்; பெண்களை அடிமைப்படுத்தும் கண்மூடி வழக் கம் நீங்க வேண்டும்; முன்னேற்றத்துக்குத் தடை யாக உள்ள மூடப் பழக்க வழக்கங்கள் களையப்பட வேண்டும்; சுருங்கக் கூறினால் மக்கள் வாழ்வில் புதிய மறுமலர்ச்சி ஏற்பட வேண்டும் என்று துடித்த சமுதாய சீர்திருத்த சிற்பி பாரதியார்.

### புகழுடம்பு எய்தல்

இங்ஙனம் ஒப்பற்ற பெருங் கவிஞராய் விளங் கிய பாரதியார் தம் முப்பத்தொன்பதாவது வயதி

லேயே இவ்வுலக வாழ்வை நீத்தது நம் நாடு செய்த தவக் குறைவேயாகும். திருவல்லிக்கேணியில் வாழ்ந்து வந்த பாரதியார் பார்த்தசாரதி கோயிலுக்குச் சென்றிருந்த போது தம் கையிலிருந்த தேங்காய் பழங்களை வழக்கம் போல் கோயில் யானைக்குக் கொடுக்க முற்பட்டார். மதங் கொண்டிருந்த அந்த யானை கவிஞரைத் துதிக்கையால் தூக்கி மோதிவிட்டது. அதனால் நோயுற்ற அவர் 1921ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 12ஆம் நாள் இப்பூவுலக வாழ்வை நீத்துப் புகழுடம்பு எய்தினார்.

**நினைவுச் சின்னங்கள்**

பாரதியார் மறைந்தாலும் அவர் புகழ் அவருடைய கவிதைகள் உள்ள வரையில் இவ்வுலகில் நிலைத்து நிற்கும். அவருடைய நினைவுச் சின்னமாக அவர் பிறந்த எட்டயபுரத்திலே தமிழ் மக்கள் ஒரு மணி மண்டபத்தை எழுப்பி உள்ளனர். அஃது அவருடைய புகழ்க் கோயிலாகப் பொலிகிறது. அவர் கனவை நனவாக்கும் வகையில் தேமதுரத் தமிழோசையைத் தெருவெல்லாம்—உலகெல்லாம் பரப்பிய உலகத் தமிழ் மாநாட்டில் அம் மகாகவிக்குச் சிங்காரச் சென்னையில் சிலையமைத்துப் பாராட்டியது சாலவும் பொருத்தமாகும். முறுக்கிய மீசையும், காந்தக் கண்களும், கட்டிய தலைப்பாகையும், நிமிர்ந்த தோளும், துடிதுடிப்பான தோற்றமும் கொண்ட பாரதியின் எழுச்சி மிகுந்த அவ்வுருவச் சிலை இந் நாட்டு இளைஞர்கள் உள்ளத்தில் நாட்டுப் பற்றையும் மொழிப் பற்றையும் ஊட்டி வளர்க்கும் என்பது உறுதியாகும்.

# 10. பாவேந்தர் பாரதிதாசன்

தமிழகத்தில் இன்று தமிழுணர்வு பொங்கி வழிகின்றது. பாரதி கண்ட கனவு நனவாகி எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்னும் நிலை உருவாகி வருகின்றது. தமிழில் பலதுறை இலக்கியங்கள் தோன்றி வளம் பெற்று வருகின்றன. எட்டுத்திக்கிலும் உள்ள கலைச் செல்வங்கள் யாவும் நம் கன்னித் தமிழிலே உருப்பெற்று வருகின்றன. எண்ணத்திலே புதுமை, எழுதும் முறையிலே புதுமை, கவிதையிலே புதுமை, காவிய அமைப்பிலே புதுமை பூத்து வருகின்றன. சீர்திருத்த எழுச்சி மணம் எங்கும் வீசுகிறது. சுருங்கக் கூறினால் தமிழ் மொழியில், தமிழர் வாழ்வில், தமிழகத்தில் ஒரு புதிய மறுமலர்ச்சி—அமைதியான புரட்சி ஏற்பட்டு வருகிறது. இத்தகைய மறுமலர்ச்சிக்கு—முற்போக்கான சிந்தனைகளுக்கு வித்திட்டவர்களில் மகாகவி பாரதியாரும், அவர் நெறியைப் பின்பற்றித் தமிழிலக்கியத் துறையில் புதுமை பல விளைத்த பாவேந்தர் பாரதிதாசனும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

## பிறப்பும் இளமையும்

பாவேந்தர் பாரதிதாசனார் புதுமை வளங்கொழிக்கும் புதுவை மாநகரில் 29-4-1891இல் கனகசபை முதலியார்க்கும், இலட்சுமி அம்மையார்க்கும் மூன்றும் மைந்தராகப் பிறந்தார். இளமையில் பெற்றோர்கள் இவருக்கு இட்ட பெயர் சுப்புரத்தினம் என்பதாகும். புதுவையில் வாணிகம்

புரிந்து வாழ்ந்து வந்த கனகசபை முதலியார் தம் மைந்தரை அன்புடன் வளர்த்து வந்தார். சுப்புரத்தினம் வளர் பிறையென வளர்ந்து கல்வி கற்கும் பருவம் எய்தினர்.

### கல்வியிற் சிறத்தல்

இளமையில் சுப்புரத்தினம் திருப்புளிசாமி என்பவர் நடத்திய திண்ணைப் பள்ளியில் பயின்றார்; தமிழார்வம் மிக்க அவ்வாசிரியர் இளமையிலேயே சுப்புரத்தினத்தின் உள்ளத்தில் தமிழுணர்வை ஊன்றிவிட்டார். பின்னர்ப் பள்ளியில் தமிழ் கற்பித்த பங்காரு பத்தர் என்னும் தமிழாசிரியர் அவ்வுணர்வு செழித்து வளரத் துணைபுரிந்தார். அதனால் இளமை முதல் சுப்புரத்தினம் செந்தமிழைக் கற்பதிலேயே சிந்தையைச் செலுத்தினர். அந்நிய மொழியாகிய பிரெஞ்சு மொழியைக் கற்பதில் ஆர்வம் கொள்ளவில்லை. அதனால் அவர் சிறந்த தமிழ்ப் புலவராகிய சாரம் பெரியசாமிப் பிள்ளை என்பவரை அடுத்துத் தமிழ் இலக்கண இலக்கியங்களை முறையாகக் கற்று வந்தார்.

### தமிழாசிரியர்

தமிழில் நல்ல புலமை பெற்றபின் சுப்புரத்தினம் கல்வே கல்லூரியில் சேர்ந்து தமிழ் பயின்று முதன்மையாக வெற்றி பெற்றார். அவருடைய அறிவுத் திறமையை அனைவரும் பாராட்டினர். பின்னர் அவர் ஓர் ஆரம்பப் பள்ளியில் தமிழாசிரியர் பணியை ஏற்றுத் தம் வாழ்வைத் தொடங்கினர். அப்போது அவருக்கு வயது பதினேழேயாகும். அந்த இளம் பருவத்திலேயே அவர் பேரறிவும் சொல் வன்மையும்

அஞ்சா நெஞ்சமும் நேர்மையும் உடையவராக விளங்கினார்.

### வண்ணக் கவித்திறன்

கவிபாடும் திறமை அவருக்குப் பிறவியிலேயே வாய்த்த பெருஞ் செல்வமாக அமைந்திருந்தது. அவர்தம் உள்ளத்துணர்ச்சிகளை அழகிய கவிதைகளாக்கி மகிழ்வார். ஆதியில் அவை பெரும்பாலும் பக்திப் பாடல்களாகவே இருந்தன. அப்படி அவர் இயற்றிய நூல்களுள் ஒன்று சுப்பிரமணியர் துதியமுது என்பதாம். மயிலத்தில் கோயில் கொண்டுள்ள முருகப்பெருமான் மீது பாடப்பட்ட இந்நூல் இசையோடும் தாளத்தோடும் பாடக் கூடிய வண்ணப் பாடல்களாகவே அமைந்துள்ளமை அவருடைய கவித் திறமையை நன்கு விளக்கும்.

### வாழ்வில் திருப்புமுனை

இங்ஙனம் பக்திநெறியில் ஈடுபட்டுப் பரமனைப் பாடிவந்த கவிஞர் வாழ்வில் ஒரு திருப்பு முனை ஏற்பட்டது. மகாகவி பாரதியார் ஆங்கில ஆட்சியின் கொடுமைக்கு அஞ்சிப் புதுவையைப் புகலிடமாகக் கொண்டு வாழ்ந்தபோது அவரோடு தொடர்பு கொள்ளும் வாய்ப்பு கவிஞருக்குக் கிடைத்தது. நாட்டுப் பற்றுணர்வு பொங்க, இனிய எளிய இசைப் பாட்டு நடையில் பாமரரும் உணர்ந்து எழுச்சி கொள்ளுமாறு பைந்தமிழ்ப் பாட்டிசைத்த பாரதியாரிடம் சிந்தையைப் பறிகொடுத்தார் நம் கவிஞர்; அதனால் அவரைப் போல எளிய நடையில் உணர்ச்சி மிக்க கவிதைகளை இயற்றுவதில் ஆர்வம் கொண்டார். அவருடைய கவித்திறமையை அறிந்திருந்த

பாரதியார், அதனை மற்ற நண்பர்கட்கு உணர்த்த அவரை ஒரு கவிதை இயற்றிப் பாடுமாறு கூற நம் கவிஞர் உடனே,

"எங்கெங்கு காணினும் சக்தியடா—தம்பி
ஏழுகடல் அவள் வண்ணமடா!"

என்று தொடங்கிச் சக்தியைப் புகழ்ந்து ஒரு பாடல் பாடினர். பாரதியார் கவிஞரைத் தட்டிக் கொடுத்து வாழ்த்தி, அப்பாடலைப் 'பாரதி கவிதா மண்டலத்தைச் சேர்ந்த சுப்புரத்தினம் இயற்றியது' எனக் குறிப்பிட்டுச் சுதேசமித்திரன் நாளிதழில் வெளியிடுமாறு அனுப்பி வைத்தார்.

### பாரதியாருடன் பழக்கம்

பாரதியார் காட்டிய அன்பும் ஆதரவும் நம் கவிஞரை அவரோடு இறுகப் பிணித்து விட்டன. அதனல் நம் கவிஞர், பாரதியார் புதுவையில் வாழ்ந்த காலம் முழுதும் அவருக்கு உற்ற தோழராய், மாணவராய் விளங்கி வந்தார். இங்ஙனம் பத்தாண்டுக் காலம் பாரதியாரோடு நெருங்கிப் பழகி அவருடைய இன்ப துன்பங்களில் பங்கு கொள்ளும் வாய்ப்புப் பெற்றமையால் பாரதியாரிடம் சிறந்து விளங்கிய சாதி மத ஒழிப்பு, மூடப் பழக்க வழக்க எதிர்ப்பு ஆகிய சீர்திருத்த நோக்கங்களும் தேசீய உணர்ச்சியும் நம் கவிஞரையும் பற்றிக் கொண்டன.

### மனையற வாழ்வு

நம் கவிஞர் தம் முப்பதாவது வயதில் பெருமாத்தூர் பரதேசி அவர்களின் ஒரே மகள் பழனியம்மாளை மணந்து இல்லற வாழ்வில் ஈடுபட்டார். வள்ளுவர்

பெண்மைக்குக் கூறிய இலக்கணங்களின் உருவாய் அமைந்த அம் மாதரசியாருடன் நம் கவிஞர் புகழ் புரிந்த இல்லற வாழ்வு நடத்தி இன்பமாக வாழ்ந்து வந்தார். அவர்கள் இன்ப வாழ்வின் பயனாக அறி வறிந்த நன்மக்கள் பலர் தோன்றி இன்பம் விளைத்தனர்.

'பாரதிதாசன்'

பாரதியாருடைய தோழமையால் நம் கவிஞருடைய குடும்ப வாழ்வில் பக்தி உணர்வுடன் தேசீய மணமும் கமழ்ந்தது. பக்திப் பாடல்கள் பாடி வந்த நம் கவிஞர் நாட்டுப்பற்றுணர்ச்சி மிக்க நல்ல கவிதைகளையும் பாடத் தொடங்கினர்; கதராடை உடுத்துக் கதர் மூட்டையைச் சுமந்து வீடுதோறும் விற்கத் தொடங்கினர்; இங்ஙனம் தேசீய உணர்வு மிக்கவராய் நாட்டு விடுதலைக்கு உழைப்பதையே நோக்கமாய்க் கொண்டொழுகி வந்த நம் கவிஞரைத் துன்பங்கள் சூழலாயின. அரசாங்கப்பள்ளி ஆசிரியராக இருந்த கவிஞர் அரசியலில் நேரே ஈடுபடமுடியாமல் தவித்தார். உள்ளத்தில் பொங்கிய உணர்ச்சிகளை அவர் கவிதைகளாக வடித்தாலும் அவற்றை வெளிப்படுத்த வழியறியாமல் விழித்தார். அதனல் தாம் எழுதிய பாடல்களை எல்லாம் கே. எஸ். பாரதி தாசன் என்ற புனை பெயரில் பத்திரிகைகட்கு அனுப்பிவைத்தார். இங்ஙனம் அரசாங்கத்துக்காக மேற்கொண்ட புனை 'பெயரே பிற்காலத்தில் அவருடைய புகழ்ப்பெயராய் அமைந்துவிட்டது.

**சீர்திருத்த ஆர்வம்**

நாட்டு விடுதலைக்காக இங்ஙனம் அயரா துழைத்து வந்த பாரதிதாசனர் 'ஒன்றுபட்டால்

உண்டு வாழ்வு' எனக் கண்டார்; ஒற்றுமைக்குப் பகையாக நம்நாட்டில் முளைத்துள்ள சாதிமத பேதங்களையும் மூடப்பழக்க வழக்கங்களையும் களைந்தெறிய வேண்டும் என்று துடித்தார். எனவே அவர் பாரதியாரைப் பின்பற்றிச் சமுதாயச் சீர்திருத்தக் கட்டுரைகளும் கவிதைகளும் எழுதத் தொடங்கினர்.

### தன்மான இயக்க ஈடுபாடு

அக்காலத்தில் புதுவையில் தன்மான இயக்கம் வேகமாகப் பரவ ஆரம்பித்தது. குறுகிய மூடப்பழக்க வழக்கங்களைக் கண்டித்துச் சாதிமத பேதங்களை ஒழிக்கப் பகுத்தறிவுப் பிரசாரம் புரிந்து வந்த அவ்வியக்கத்தின் முற்போக்கான கொள்கைகள் பாரதிதாசனரின் மனத்தைக் கவர்ந்தன. அதனல் அவர் அவ்வியக்கத்தை ஆதரித்தார். படிப்படியே அவர் மனமும் தன்மான இயக்கத்தில் ஈடுபட்டது.

### புதுவை முரசு

தன்மான உணர்ச்சிகொண்ட பாரதிதாசனர் மக்களை மூடி மறைத்துள்ள அறியாமைத் திரையைக் கிழித்தெறியத் துடித்தார். அதற்காகப் 'புதுவை முரசு' என்னும் வார இதழ் தொடங்கப்பெற்றது. அவ்விதழின் பெரும்பகுதி பாரதிதாசனரின் எழுத்து வண்ணமாகவே அமைந்தது. அதில் வெளியான பாடல்களும் கட்டுரைகளும் சாதிமத உணர்வுகளைத் தாக்குவனவாகவும், மூடப்பழக்க வழக்கங்களை முறியடிப்பனவாகவும், சமுதாய சீர்திருத்தங்களுக்கு வழிகோலுவனவாகவும் அமைந்திருந்தன. மூடப்பழக்க வழக்கங்களை நகைச்சுவையோடு கண்டித்துச் சமூக சீர்திருத்தத்தைத் தூண்டும் 'சஞ்சீவி பர்வதத்தின்

சாரல்' என்ற கவிதைப் படைப்பு இக்காலத்தில் தோன்றியதாகும்.

### பகுத்தறிவுப் பணி

பாரதிதாசனார் தம் மனத்திற்கு உண்மை எனத் தோன்றியதை யாருக்கும் அஞ்சாமல் எடுத்துரைத்துப் பரப்பும் நெஞ்சுரம் வாய்ந்தவர். ஆதலால் அவர் சமுதாய வாழ்வில் பெரும் புரட்சியை உருவாக்கக் கூடிய தீண்டாமை ஒழிப்பு, காதல் மணம், விதவா விவாகம், குடியாட்சியின் மேன்மை போன்ற சீர்திருத்தக் கருத்துக்களைச் சிறிதும் அச்சமின்றிப் பரப்பி வந்தார். பாரதிதாசனாரின் கொள்கைகள் மக்களிடத்தில் செல்வாக்குப் பெறலாயின. அதைக் கண்டு சிலர் மிகவும் எரிச்சலடைந்தனர்.

### தொல்லைகளைப் புறங்காணல்

அவர்கள் அரசாங்கத் துணைகொண்டு பாரதிதாசனார்க்கு அல்லல்கள் பல விளைக்க முற்பட்டனர். அரசாங்கப்பள்ளி ஆசிரியராகப் பணியாற்றிய அவரைப் போக்குவரவு வசதியற்ற சிற்றூர்களுக்கெல்லாம் மாற்றித் தொல்லை விளைத்தனர். எந்த ஊரிலும் அவரைச் சில திங்கள்களுக்குமேல் நிலைக்க விடுவதில்லை. ஆனால் கவிஞர் இத்தொல்லைகளைக் கண்டு சிறிதும் அஞ்சவில்லை. சென்ற விடங்களெங்கும் கவிஞருக்குச் செல்வாக்கு பெருகியது ; மக்களாதரவு மலர்ந்தது. அதனால் எதிர்த்தவர்கள் அனைவரும் ஏமாற்றமடைந்தனர்.

### புரட்சிக் கவிஞர்

நச்சு மனத்தினர் நம் கவிஞரின் புகழைக் குலைக்கத் தொடர்ந்து முயன்று வந்தனர். ஆனால் நம்

கவிஞரோ புகழின் உச்சிக்குச் சென்று கொண்டிருந்தார். பாரதிதாசனார் அதுவரை எழுதிய அற்புதமான கவிதைகளை எல்லாம் தொகுத்துப் 'பாரதிதாசன் கவிதைகள்' என்ற பெயரில் 1938 இல் ஒரு நூல் வெளியிடப்பெற்றது. அந்நூல் வெளிவந்தவுடன் பாரதிதாசனாரின் புகழ் குன்றிலிட்ட விளக்குப் போலத் தமிழகமெங்கும் பரவியது. அவருடைய கருத்துக்களில் வேறுபட்டவர்களும் இனிய கவித் திறமையில் உள்ளத்தைப் பறிகொடுத்துப் பாராட்டலாயினர். மக்கள் மனத்தில் தம் எழுச்சி மிக்க பாடல்கள் வாயிலாக ஒரு பெரிய புரட்சிக்கு வித்திட்டதோடு, கவிதைத் துறையில் அவர் விளை வித்துக் காட்டிய புதுமைகள் அவருக்குப் 'புரட்சிக் கவிஞர்' என்ற புகழ்ப் பெயரைத் தந்தன.

## பொற்கிழி வழங்குதல்

இங்ஙனம் தாய்மொழித் தொண்டில் தலை சிறந்து விளங்கிய புரட்சிக் கவிஞருக்கு நன்றி செலுத்தத் தமிழகம் விரும்பியது. புரட்சிக் கவிஞருக்குப் பொன்னாடை போர்த்திப் பொற்கிழி வழங்க ஏற்பாடு செய்யப்பட்டது. தமிழ் மக்கள் அனைவரும் கட்சி வேறுபாடுகளை எல்லாம் மறந்து விழா சிறக்கப் பேருதவி புரிந்தனர். 28-7-46 அன்று வெள்ளம் போல் குழுமியிருந்த தமிழ் மக்கள் உள்ளமெலாம் துள்ள நாவலர் சோமசுந்தர பாரதியார் தலைமையில் பாரதிதாசனாருக்குப் பொன்னாடை போர்த்தி, இருபத்தைந்தாயிரம் வெண் பொற்காசுகள் அடங்கிய பொற்கிழி வழங்கிப் பாராட்டப்பட்டது. கூடியிருந்த பெருந்திரளான மக்கள் 'பாவேந்தர் பாரதிதாசன் வாழ்க' என்று வாழ்த்தி மகிழ்ந்தனர்.

### ஆசிரியப் பணியிலிருந்து ஓய்வு

நம் பாவேந்தர் அவர்கள் இங்ஙனம் பற்பல வகையில் பொதுத் தொண்டுகளாற்றி வந்தநேர்டு தாம் மேற்கொண்ட ஆசிரியப் பணியையும் வழுவின்றிச் செய்து வந்தார். அவர் தம்மிடம் பயின்ற இளஞ்சிறுர்கட்குத் தாய்த் தமிழை அமிழ்தில் குழைத் தூட்டி அவர்களுடைய அறிவை வளர்த்து வந்தார். அவர்களுடைய அறிவு விளக்கத்துக்கென்றே பற்பல இன்சுவைக் கவிதைகளை, உரையாடல்களை, சிறு நாடகங்களை ஆக்கித் தந்தார். பாரதியார் சிறுவர்கட்காகப் புதிய ஆத்தி சூடி படைத்தது போல, நம் பாவேந்தர் இளைஞர்க்கேற்ற 'இளையர் ஆத்தி சூடி'யை இயற்றியளித்தார். இங்ஙனம் முப்பத்தெட்டாண்டுகள் அரிய தமிழ்த் தொண்டாற்றி 8-11-46இல் ஓய்வு பெற்ருர் பாரதிதாசனுர்.

### கவி வெள்ளம்

பாவேந்தர் ஓய்வு பெற்ற பின் அவர் முழு நேரமும் பொதுத் தொண்டிற்கே பயன்பட்டது. அவர் பற்பல இடங்களுக்கும் சென்று தம் சொற்பொழிவுகளால் தமிழுணர்வைப் பரப்பினுர்; கவிதைகள், கட்டுரைகளை எழுதிக் குவித்தார். கவிதை இயற்றுவது அவருக்குக் கை வந்த கலை. பாட்டெழுத வாய்ப்பான நேரமும் சூழ்நிலையும் வேண்டுமென்ற அவசியம் அவருக்கு இல்லை. எந்த நேரத்திலும் எதைப் பற்றியும் தங்கு தடையில்லாமல் வெள்ளம்போல் பாடும் ஆற்றல் அவரிடம் அமைந்திருந்தது.

### நூல்கள்

அவர் இயற்றிய கவிதை நூல்களில் அழகின் சிரிப்பு, இசையமுது, தமிழ் இயக்கம், குடும்ப

விளக்கு, இருண்ட வீடு, எதிர்பாராத முத்தம், பாண்டியன் பரிசு முதலியன குறிப்பிடத்தக்கனவாம். இவை தவிரப் பல உரைநடை நூல்களையும் அவர் இயற்றியுள்ளார். 'குயில்' என்னும் கவிதை இதழ் ஒன்றும் அவர் நடத்தி வந்தார். முழுவதும் கவிதையினாலேயே அமைந்த அவ்விதழ் பத்திரிகை உலகிற்கே ஒரு புதுமையாகும்.

### சட்டமன்ற உறுப்பினர்

இவ்வாறு பல துறைகளிலும் நம் நாட்டுக்கும் மொழிக்கும் நற்றொண்டாற்றி வந்த பாவேந்தர் அவர்கள் அறுபதாம் அகவை எய்திய போது திருச்சியில் அம்மணி விழா சீரும் சிறப்புமாகக் கொண்டாடப்பட்டது. புதுவை மாநிலம் பிரெஞ்சுப் பிடியிலிருந்து விடுபட்டு இந்தியாவுடன் இணைந்தபின் 1955 இல் அங்குச் சட்ட மன்றத் தேர்தல் நடைபெற்றது. பாவேந்தர் அவர்கள் தேர்தலில் வெற்றி பெற்றுச் சட்ட மன்ற உறுப்பினரானார். புதுவை மாநிலச் சட்ட மன்ற முதற் கூட்டத்திற்குத் தலைமை வகிக்கும் பேறு நம் பாவேந்தருக்கே வாய்த்தது. பாவேந்தர் அவர்கள் தமிழிலேயே உரையாற்றிச் சட்ட மன்றத்தைத் தொடங்கி வைத்தார்; அதன் மூலம் தமிழ் மொழிக்கு அழியாத பெருமையைத் தேடித் தந்தார்.

### இறுதி எய்தல்

இங்ஙனம் எழுபத்து மூன்றாண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்து தமிழே தம் உயிர் மூச்சாகக்கொண்டு, தமிழ் வாழ, தமிழினம் முன்னேற அஞ்சா நெஞ்சமுடன் அயராதுழைத்து வந்த பாவேந்தர்

அவர்கள் 21-4-1964 அன்று இவ்வுலக வாழ்வை நீத்தார். அவர் மறைந்துவிட்டாலும், அவர் பாடிக் குவித்துச் சென்ற கற்கண்டுக் கவிதைகள் தமிழ் மக்கள் சுவைத்துச் சுவைத்துப் புத்துணர்ச்சியும், புது எழுச்சியும் பெறுவதற்குத் துணையாக உள்ளன.

'தமிழுக்கு அமுதென்று பேர்—அந்தத்
தமிழ்இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர்'

என்று தமிழையே உயிராகக் கருதி வாழ்ந்தவர் பாவேந்தர். 'தமிழினம் முன்னேறத் தமிழே துணை யாகும்; தமிழ் வாழ்ந்தால், வளம் பெற்றால் தமிழினம் வாழும்; வளம் பெறும்,' என்பது பாவேந்தரின் அசைக்க முடியாத நம்பிக்கை.

சிலையாகி நிற்கும் செம்மல்

தமிழகத்தைத் தட்டி எழுப்பி எழுச்சி பெறச் செய்த பாவேந்தர் பாரதிதாசனார் மறைந்து விட்டாலும் தமிழ் மக்கள் அவரை என்றும் மறவார் என்பதனை அண்மையில் நடந்த இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு எடுத்துக் காட்டிவிட்டது. தமிழர் நெஞ்சமெல்லாம் பூரிக்கும் அப்பெரு விழாவில் தமிழ் மக்கள் வெள்ளம் போல் ஒன்றுபட்டுக் கூடியிருந்த காட்சியைக் கண்டிருந்தால் பாவேந்தர் உள்ளம் இமயமலை போல் பூரித்திருக்கும் என்பதில் ஐயம் இல்லை. அக்காட்சியைக் காண ஏங்கித் துடித்த கவிஞருக்கு அப்பெரு விழாவில் சிலையமைத்து அவர் கனவை நனவாக்கிக் காட்டிய நன்றிச் செயல் போற்றற்குரியது. சிலையாகி நிற்கும் பாவேந்தர் புகழ் என்றும் நிலையாகி இவ் வையம் உள்ளளவும் வாழ்வதாக.

## பயிற்சி

பின்வரும் தலைப்புக்களுள் ஒவ்வொன்று பற்றியும் இரண்டு பக்க அளவில் கட்டுரை எழுதிப் பழகுக.

1. திருக்குறளின் பெருமை
2. வள்ளுவரின் வாழ்க்கை
3. அவ்வையாரின் அரிய வாழ்வு
4. அதியமானும் அவ்வையாரும்
5 கண்ணகியின் கற்பு மாண்பு
6. கண்ணகியின் வழக்குரை
7. கவிச் சக்கரவர்த்தி கம்பர்
8. கம்பரின் நன்றி மறவா நற்பண்பு
9. வீரமா முனிவரின் வாழ்க்கை
10. வீரமாமுனிவரின் தமிழ்த் தொண்டுகள்
11. போப்பையரின் தமிழ்ப்பற்று
12. போப்பையரின் முதுமைக் காலப்பணி
13. கால்டுவெல் ஒப்பிலக்கணம்
14. சிதம்பரனாரின் தியாக வாழ்வு
15. கப்பலோட்டிய தமிழர்
16. பாரதியாரின் நாட்டுத்தொண்டு
17. கவியரசர் பாரதியார்
18 புரட்சிக் கவிஞர்
19. பாரதிதாசனாரின் தமிழ்த்தொண்டு

# Silai Yahi Nirkum Semmalgal

BY

Vidwan G. VILVAPATHY

**Price Re. 1-00**

Super Power Press, Madras-1.